

# நெரூர் ஸ்ரீ சதாசிவப் பிரம்மேந்திரர் சரித்திரச் சுருக்கம்

1160

A.No: 1160

...லாச ஆசிரம வெளியீடு
1983



52-2 3274

# நெரூர் ஸ்ரீ சதாசிவப் பிரம்மேந்திரர்
## சரித்திரச் சுருக்கம்







நெரூர் தவத்திரு
சதாசிவானந்த சுவாமிகள்
அருளியது



கைலாச ஆசிரம வெளியீடு
மூன்றாம் பதிப்பு
**1983**

விலை ரூ. 4-50



அச்சிட்டோர்,
பிரேமா ஆர்ட் பிரிண்டர்ஸ்
35, ஆற்காடு சாலை,
சென்னை - 600024.





ஸ்ரீ சதாசிவ பிரம்மேந்திராள்



ஸ்ரீலஸ்ரீ சதாசிவானந்த சுவாமிகள்

கைலாச ஆஸ்ரமம், நெரூர் - கரூர்

உ

கஜானனம் பூத கணாதி சேவிதம்
கபித்த ஜம்போ பலசார பட்சிதம்
உமாசுதம் சோக விநாச காரணம்
நமாமி விக்னேஸ்வர பாத பங்கஜம்

# ஸ்ரீ சதாசிவ பிரம்மேந்திராள் சரிதம்

நெரூர் ஸ்வாமிகள்
ஸ்ரீ சதாசிவானந்தா அவர்கள்
அருளிய

## முன்னுரை

நமது பாரததேசம் புண்ணிய தேசம், வட்புறத்தில் உயர்வற உயர்ந்த பர்வதங்களையும், மற்ற மூன்று திசைகளிலும் ஆழ் கடல்களையும் எல்லைகளாகக் கொண்ட இந்தப்பரத கண்டத்திலே. புண்ணிய புருஷர்கள் அநேகம் பேர் தோன்றி சனாதன தர்மத்தைப்பற்றி உரைத்தனர். ஆரம்ப முதல் அந்திய வரைக்கும் சனாதன தர்மத்தின் முடி பொருளை நன்கு அறிந்து அநுபவித்து அநுபூதி பெறுகின்றவரைக்கும் உள்ள கருத்துக்களை கிரமமாக வகுத்து உரைத்தனர். மிக மிக ஆழ்ந்த கருத்துக்களைத் தன்னகத்தே அநுபவமாகக் கொண்டது "இந்து தர்மம். தோன்றாத, மறைவுபடாத, மாறுபாடற்ற, எப்போதும் ஒரே படித்தாகி நிற்கும் இந்த இந்து தர்மத்தை சனாதன தர்மம் என்று சொல்வோம்.

ருக், யஜுர் சாம, அதர்வண வேதங்கள் நான்கும் தக்கவை தகாதவை (விதி, நிஷேதம்) இன்னதென்பதை தெளிவுபடுத்திக் கூறும். அவ் வேதங்களின் முடிபொருளாக இருப்பவை உபநிஷத்துக்கள். அவற்றுள் பத்து உபநிஷத்துக்கள் சிறந்தவை. சனாதன தர்மம் பற்றி இவை கூறும் கருத்துக்களையெல்லாம் ஓரளவு நாம் ஆராய்ந்து பார்த்து விட்டு பிரம்மேந்திராள் சரித்திரத்திற்குப் போக வேண்டும்.

பிரிதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்பன பஞ்ச பூதங்கள். இந்த பஞ்சபூதங்கள் மூலப் பிரகிருதியின் தமோ குணத்திலே கற்பிக்கப் பட்டன. கண்ணுக்குத் தோன்றுகின்ற பொருள்களெல்லாம் கற்பனைப் பொருள்கள், மனதிலே நினைக்கின்ற பொருள்களெல்லாம் கற்பனைப் பொருள்கள் உதாரணமாக பிரிதிவியை எடுத்துக் கொள்வோம். பிரிதிவி எனில் மண். மண்ணிலிருந்து எல்லாப் பொருள்களும் தோன்றும். பஞ்ச வர்ணங்களும், சத்ரசங்களும், விஞ்ஞான சாமான்கள் அனைத்தும் மண்ணிலிருந்து தான் தோன்றும். மண்ணுக்குள்ளே பஞ்சவர்ணங்களோ, சத்ரசங்களோ தெரிய வில்லை. ஆனால் மண்ணிலிருந்து வருகின்ற பொருள்கள் பஞ்சவர்ணங்களாக மிளிர்கின்றன. சத்ரசங்களாகப் பரிண மிக்கின்றன. விஞ்ஞானத்திற்கு உதவும் எல்லாச் சாமான் களாக விளங்குகின்றன. மீண்டும் இவையனைத்தும் மண் ணுக்குள்ளேயே புகுந்து மண்ணாகவே மாறிவிடுகின்றன.

மண்ணிலே உவர்ப்போ, புளிப்போ, கார்ப்போ. கசப்போ இனிப்போ, துவர்ப்போ சொல்ல முடியாது. வர்ணங்களும் சொல்ல முடியாது. ஆனால் மண்ணிலிருந்துதான் இவை யெல்லாம் வருகின்றன. பகவத் கீதையிலே ஓரிடத்திலே கிருஷ்ண பரமாத்மா இக்கருத்தை வெளிப் படுத்துகிறார்.

மண்ணினுடைய விகாரமும் மண்ணே மண்ணொழித்துப்
பண்ணினரும் பிறரில்லை, பண்ணப்பட்ட பல பொருட்கள்
எண்ணின் ஆகுவதன் முன்பும் நிகழ்விடத்தும் இறந்த
காலத்தும்

மண்ணொழியக் கண்டாருளரோ!

மண்ணினுடைய விகாரம் என்று சொல்லி விட்டார். எல்லாப் பொருட்களும் மண்ணே. தோன்றுவதற்கு முன்பும், மண் தோன்றி, மரமாக, மக்களாக, மிருகங்களாக, பட்சிகளாக இன்னும் பலவாக வளர்ந்திருப்பவையெல்லாம் மண்ணே.

மண்ணொழித்துப் பண்ணினரும் பிறரில்லை — எத்தனை விஞ்ஞான சாமான்கள் பண்ணினாலும் மண்ணிலிருந்து உண்

டானவைகளை வைத்துப் பண்ணினவையே. எண்ணின் ஆராய்ந்து பார்த்தால் ஆதுவதன் முன்பும், நிகழ்விடத்தும் இறந்தகாலத்தும் — மண்ணுக்குள்ளே இருக்கின்ற போதும் பொருட்களாக வடிவெடுத்த பின்னரும், பின்னர் வடிவொழிந்து மறைந்த பின்பும்.

மண்ணொழியக் கண்டாருளரோ — மண் அல்லாது பிற பொருள் இல்லை. மண்ணேதான்.

ஆகவே எல்லாப் பொருட்களும் மண்ணிலிருந்து உண்டானவைதான் விகாரமடைந்து இருக்கின்றன.

லௌகீக உதாரணத்திலே சொன்னால் மலை, நதி, கோபுரங்கள் என என்னென்ன பொருட்கள் நாம் கண்ணால் காண்கிறோமோ, மனதால் நினைக்கின்றோமோ, அநுபவிக்கின்றோமோ அவையனைத்தும் மண்ணிலிருந்து வந்தவைதான் மீண்டும் மண்ணுக்குள்ளேயே புகுந்து மண்ணுக்கு அந்நியமில்லாமலே மண்ணுக்குள்ளே மண்ணாகவே ஆகிவிடும். அந்த மண்ணும், தண்ணீரும், நெருப்பும், காற்றும், ஆகாயமும் எண்ணத்திலிருந்து வந்தவைகள் அவை எண்ணத்துக்குள்ளே ஒடுங்கிவிடும். மனம் எண்ணவிட்டால் எந்த உலகமும் இல்லை. எந்த அண்டங்களுமே இல்லை. மனத்தினால் எண்ணித்தானே வந்தது இவ்வுலகம்!

சுசுப்தி அவஸ்தையிலே (கனவற்ற ஆழ்ந்த உறக்கம்) மனம் எண்ணவில்லை. உலகப் பொருட்களைப் பற்றிய சிந்தனையே கிடையாது. ஜாக்கிரதாவஸ்தையிலே இந்த ஸ்தூல சரீரத்தை அபிமானித்துக் கொண்டிருக்கிறோம். கண்ணுக்குத் தெரிகின்ற சரீரத்திற்கு ஸ்தூல சரீரம் என்று பெயர். இது மண்ணிலிருந்து உண்டான அரிசி, பருப்பு, பால், பழரசம், தயிர் முதலியவைகளைப் பக்குவப்படுத்திச் சாப்பிட்டு அது உள்ளே புகுந்தவுடனே பிராணாதி வாயுக்கள் ஒன்று கடைந்து தள்ளும், ஒன்று இரத்தமாக மாற்றும், ஒன்று நாடி நரம்புகளிலே இரத்தத்தைச் செலுத்தும், ஒன்று பாதுகாத்துக் கொண்டிருக்கும் ஒன்று இரத்தத்தில் இருக்கப்பட்ட விஷக்கிருமிகளையெல்லாம் வெளியே ஓட்டுவதற்

காக உஸ்வாச நிஸ்வாசம் செய்துகொண்டு நவத்துவாரங்களின் வழியாக அசுத்தங்களை வெளிப்படுத்திக் கொண்டேயிருக்கும் இரத்தத்திலுள்ள ஓரளவு சுத்தமான சாமான்களைக்கொண்டுதான் தோல், நரம்பு, தசை, கொழுப்பு, கை, கால் அவயங்கள் பிறவும் சேர்ந்த இவ்வுடலை அமைக்கும். இந்த உடலே அன்னத்தின் விகாரம். உடல் அன்னமயம் ஆகையால் அன்னத்தினல் உடல் பருக்கும். அன்னமில்லா விட்டால் குறைந்துவிடும். மூழுக்க முழுக்க இல்லாவிட்டால் கீழே விழுந்துவிடும்.

உண்ணும் உணவை பிராணுதி வாயுக்கள் இரத்தம் பண்ணி உடலில் எல்லா இடங்களுக்கும் செலுத்தி, உடலை வளர்த்துப் பாதுகாக்கின்றது என்று பார்த்தோம். பிராண சக்தியோடு அபி மான சக்தி புகுந்து கொண்டால் தான் உணவு இரத்தமாக மாறும். அபிமான சக்தி உடலிலே இருக்க உடல் இயங்கும் உடலை சத்தியம் என நம்புகிறவன் அபிமானி. அவன் உடலையும் தெரிந்து கொண்டிருக்கிருன், உடலுக்குள்ளே இருக்கப்பட்ட சூட்சும சரீரத்தையும் தெரிந்து கொண்டிருக்கிருன். இந்த உடலே சூட்சும சரீரம் அல்ல. அந்தக்கரணம் ஐந்து, ஞானேந் திரியங்கள் ஐந்து, வாயுக்கள் ஐந்து, கர்மேந்திரியங்கள் ஐந்து ஆக உடலுக்குள்ளே அமைந்த இந்த இருபது தத்துவங்களும் சூட்சும சரீரம் என்று சொல்லப்படும்.

உள்ளம், மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்ற ஐந்தும் அந்தக்கரணம் ஒரே மனம் நினைக்கின்றபொழுது மனம் என்றும் நிச்சயிக்கின்றபொழுது புத்தி என்றும் சிந்திக்கின்ற பொழுது சித்தம் என்றும், அபிமானிக்கின்ற பொழுது அகங்காரம் என்றும் சொல்லப்படுகின்றது. மனம் நினைத்ததையும், புத்தி நிச்சயித்ததையும், சித்தம் சிந்தித்ததையும், அகங்காரம் அபி மானித்ததையும் சேர்த்து வைத்துக் கொண்டிருப்பது உள்ளம். இது ஆகாய பூதத்தின் காரியம். ஆகாயம் எல்லாப் பொருட் களுக்கும் இடம் கொடுத்து வைத்திருப்பது போன்று நாம் எத்தனை சாஸ்த்திரங்கள் சிறு குழந்தையிலிருந்தே கற்றிருந்த போதும், எத்தனை தொழில்கள் செய்திருந்த போதும்

அத்தனையும் உள்ளத்திலே ஞாபகத்தில் இருக்கின்றது. மனம் வாயு பூதத்தின் காரியம். வாயு எப்படி சதா சலித்துக்கொண்டே இருக்கிறதோ அதே போன்று மனமும் ஒன்றை விட்டு ஒன்று தாவிக்கொண்டே இருக்கும். புத்தி அக்னிபூதத்தின் காரியம். அக்கினி எப்படி சுடர்விட்டு எரியும்போது அருகிலுள்ள பொருட்களை இன்னின்னதென்று தெரியப்படுத்துகின்றதோ அதேபோன்று புத்தி, இது புத்தகம், பென்சில், காகிதம் எனப் பிரித்துக் காண்பிக்கின்றது. சித்தம் அப்பு (தண்ணீர்) பூதத்தின் காரியம் தண்ணீர் எப்படி எல்லாச் சாமான்களையும் இறுதியில் அடிமட்டத்திலே இழுத்துக் கொண்டுபோய் வைத்துக் கொள்வது போன்று சித்தம், புத்தி நிச்சயித்தவைகளையெல்லாம் இழுத்து வைத்துக் கொள்ளும். அகங்காரம், பிரிதிவி (மண்) பூதத்தின் காரியம். மண் எப்படி கடினமாக இருந்து தன்னிடத்திலே உண்டானவைகளைத் தன் கண்ணே ஒடுக்கிக் கொள்ளுமோ அதே போல் அகங்காரமும் சித்தத்தால் இழுக்கப்பட்டவைகளையெல்லாம் தன் கண்ணே இருக்க வேண்டுமென்று பற்றிக் கொள்ளும்.

மெய், வாய், கண், மூக்கு, செவி என்பன பஞ்சேந்திரியங்கள், மனம் விஷயங்களைப் பற்றி இழுப்பதற்கு சாதனமாக இருக்கப்பட்ட கருவிகள் பஞ்சேந்திரியங்கள் ஆம். அதாவது மனம் பஞ்சேந்திரியங்களின் வழிப்போந்து வெளியே சென்று சப்த, ஸ்பரிச, ரூப, ரச கந்தங்களைக் கிரகித்துக் கொள்கிறது.

பிராணன் அபானன், வியானன், உதானன், சமானன் என்பவை ஐந்து பிராணாதி வாயுக்கள் ஆம். பஞ்சேந்திரியங்கள் இயங்குவதற்கு ஆதரவாகப் பாதுகாத்துக் கொண்டிருப்பவை பிராணாதி வாயுக்களேயாகும். உண்ணும் உணவை இந்த வாயுக்கள் இரத்தமாக மாற்றி எல்லா அவயவங்களையும் வளரவும் பருக்கவும் செய்கிறது என முன்பே கண்டோம் அல்லவா? இப்படி ஆதரவு கொடுப்பதாலேயே காது சப்தத்தைக் கேட்கும். மூக்கு வாசனை அறியும். கண் பார்க்கும். ஆக பஞ்சேந்திரியங்களின் இயக்கத்திற்கு ஆதரவாக இருப்பதே பிராணாதி வாயுக்கள்தான்.

'வாக்கு, பாதம், பாணி, 'பாய்று, உபஸ்தம் என்ற ஐந்தும் கர்மேந்திரியங்கள். இதன் இயக்கங்கள் வருமாறு: வாக்கு பேசும், பாணி கொடுக்கல் வாங்கல் செய்யும், பாதம் போதல் வருதல் ஆற்றும். பாய்று மல ஜல விசர்ஜனம் செய்யும். உபஸ்தம் உடல் சுகத்தைத் தரும்.

ஆகவே இந்த இருபது தத்துவங்களும் உடலுக்குள்ளே தான் இருக்கின்றன. உச்சியிலே உள்ளமும் கருவிழி நுனியிலே சட்சேந்திரியமும் காதுக்குள்ளே சுரோத்திரேந்திரியமும், மூக்கு நுனியிலே கிராணேந்திரியமும் கழுத்துக்கு மேலே தனித்தனியே அமைந்திருக்கும். கழுத்துக்குக் கீழே கை, கால், குய்யங்களில் பாணி, பாதம், பாய்று, உபஸ்தம் நான்கும் தனித்தனியே இருக்கும். வாக்கேந்திரியமும், ஜிக்வேந்திரியமும் (நாக்கு) வாயிலிருக்கும். மனதும் உதான வாயுவும் கண்டத்திலிருக்கும். பிராண வாயுவும் புத்தியும் இருதயத்திலிருக்கும். சமான வாயுவும் சித்தமும் நாபியிலிருக்கும். அபான வாயுவும் பாய்றுவும் குதத்திலிருக்கும் வாயுக்களிலே வியான வாயுவும், அந்தக் கரணத்திலே அகங்காரமும், ஞானேந்திரியங்களிலே ஸ்பரிசேந்திரியமும் ஆக இம்மூன்றும் உடல் முழுதும் வியாபித்திருக்கும். உடலைத்தானென்று அபிமானித்திருப்பதால் நக, சிகை பரியந்தம் சீத, உஷ்ண, கடின, மிருது முதலிய ஸ்பரிசங்களை உணர முடிகிறது. வியான வாயு எல்லா அவயவங்களையும் தாங்கிக் கொண்டிருக்கிறது.

ஆக இந்த இருபது தத்துவங்களும் ஸ்தூல சரீரத்துக்குள்ளே அந்த அந்த இடங்களிலே அதனதன் வேலைகளைச் செய்கின்றன. இந்த வேலைகள் அனைத்தையும் பிரதானமாக மனம் ஒன்றே தொழிற்படுத்தும். அபிமானி எனும் ஜீவன் (உயிர்) இவையனைத்தையும் என்னுடையது என்று சொல்லி அபிமானித்துக் கொண்டிருக்கும்.

பொருள்களும் மனிதர்களும் இருக்க ஆதரவாக வீடு இருப்பது போன்று இந்த இருபது தத்துவங்களும் அமைய இவ்வுடல் ஒரு கருவியாகவுள்ளது. இந்த உடல் நாமல்ல. உடலில் இருக்கிற

அவயவங்களை முதலில் நான் என்று சொல்கிறோம். கண் பார்த்தால் நான் பார்த்தேன், காது கேட்டால் நான்கேட்டேன் என்கிறோம். ஆனால் அதே சமயம் அவயவங்கள் மாறுபாடடைகின்றபோது என் கண் பார்க்க முடியவில்லை, என் காது கேட்கவில்லை என்று இந்த உடலிலுள்ள அவயவங்களை நம்மிலிருந்து வேருகப் பிரித்து உடைமைப் பொருளாக்கி விடுகிறோம். அதனுலே எந்தக் காரணத்தைக்கொண்டும் இந்த உடல் நாமாக மாட்டோம்.

ஸூட்சும சரீரத்திலே பிரதானமாகிய மனமும் நாம் அல்ல மனதினுலே உடலைச் சத்தியம் என்று நம்பிக்கொண்டு கால் நடந்ததை நான் நடந்தேன், கண் பார்த்ததை நான் பார்த்தேன் என்று சொல்கின்றவர் ஒவ்வொரு சந்தர்ப்பத்திலேயும் அதற்கு மாறுபாடில்லாமல் இருந்து விட்டால் மனமே நாம் என்று சொல்லிவிடலாம். ஆனால் அப்படி இருப்பதில்லை. இன்னொரு சந்தர்ப்பத்தில் என் கால் நடக்க முடியவில்லை, என் கண் பார்க்க முடிவதில்லை என்பதுடன் என் மனம் நினைக்கமுடியவில்லை என்றும் சொல்லிவிடுகிறோம். ஆகவே மனமும் நாம் அல்ல.

உடலை அபிமானித்துக் கொண்டிருக்கிற ஜீவனும் நாம் அல்ல. இந்த உடலிலே ஜீவிக்க எனக்குப் பிரியமில்லை. எத்தனை துன்பங்கள் அநுபவிக்கிறேன்! என்னுடைய ஜீவனை விட்டுத்தொலைக்க வேண்டும்' என்று சொல்கிறோம். என்னுடைய ஜீவன் ஆகும் போது நாம் ஜீவன் ஆகமாட்டோம் என்பது நிச்சயம். என்னுடைய ஜீவன் என்று சொல்கின்றவன் தனக்கு அந்நியன் தானே! ஆகவே நாம் ஜீவனுக மாட்டோம்.

ஆக நாம் யார்? நாம் ஆத்மா. அது அசைகிறதில்லை மகிழ்ச்சியோ வாட்டமோ ஆத்மாவிற்கில்லை. எடுத்துக்காட்டாக 'இன்றைக்குப் பகலெல்லாம் சுற்றினேன். எல்லாக் காரியங்களும் முழுமையும் முடிந்துகொண்டேயிருக்கிறது. பெரிய திருப்தி. சந்தோஷமாயிருக்கிறேன்! என்று சொல்கிறோம். அப்படி சந்தோஷமாயிருப்பது ஜீவன். சந்தோஷமா

யிருந்ததை அறிந்து கொண்டிருந்தவன் ஆத்மா. ஒரு நாளில் அதற்கு எதிர்மறையாக எடுத்துக் கொண்ட காரியங்கள் தவறிப் போக 'நாள் முழுவதும் சுற்றியும் ஒரு காரியம்கூட முடியவில்லை. ரொம்பக் கஷ்டப்பட்டேன்' என்று சொல்கிறோம். கஷ்டப்பட்டது ஜீவன். கஷ்டப்பட்டதைத் தெரிந்து கொண்டு சாட்சியாக இருந்தவன் ஆத்மா. அதைத் தெரிந்து கொண்டிருந்த ஆத்மாவிற்குக் கிஞ்சித்தேனும் சலனம் கிடையாது. அசைவற்றிருக்கும், ஆதித்தன் போன்று. சூரியன் சுப கிருத்தியங்கள் செய்கின்றார்கள் என மகிழ்ச்சியோ, அசுப கிருத்தியங்கள் செய்கிறார்கள் என வாட்டமோ இன்றி சலனமற்று இருப்பார் அன்றோ!

எனவே உடல்களைப் பற்றியிருக்கின்ற ஜீவனும் தன்னைத் தெரிந்து கொள்கின்ற வரைக்கும், தன்னைத் தெரிந்து அனுபவம் பெற்று அநுபூதி பெறுகின்ற வரைக்கும் உலக விவகாரங்களிலே உழன்று வாட்டமும் மகிழ்ச்சியும் பெற்றுக் கொண்டேதான் இருப்பான். வாட்டம் மகிழ்ச்சி இல்லாத ஒரு ஜீவனை எந்த அண்டத்திலும் பார்க்க முடியாது. ஆகவே இந்த வாட்டமும் மகிழ்ச்சியும் அற்றபிறகு, வாட்டம் மகிழ்ச்சி அபிமானத்தினாலே வந்தது, அது ஜீவனுடைய செயல், ஜீவன் நாம் அல்ல' என்று தெரிந்து கொண்டு, ஆத்மாவாகிய நான் ஆனந்த சொரூபன், அசைவற்றவன், தோன்றாதவன், மறைவுபடாதவன், மாறுபாடற்றவன் என்று தெரிந்து கொண்டு அதிலேயே ஸ்திதி பெற்று இருந்தவர் சதாசிவ பிரம்மம். ஒரு சந்தர்ப்பத்திலேயும் உடலாக மாறவில்லை சதாசிவபிரம்மம். அப்பேர்ப்பட்ட மெய்ஞான அநுபவம் பெற்றவர் சதாசிவ பிரம்மம். அதனை அவரது சரித்திரத்திலே காண்போம்.

# முதல் அத்தியாயம்

## சதாசிவ பிரம்மத்தின் தாயும் தந்தையும்

300 ஆண்டுகட்கு முன்பு மதுரை மாநகரிலே சோமநாத யோகி, பார்வதிதேவி என்று தெலுங்கர் குலத்தில் பிறந்த இரண்டு தம்பதிகள் இல் வாழ்க்கை நடத்திக் கொண்டிருந்தார்கள். சோமநாத யோகியரது தாய் தந்தையர் யார் என எந்தச் சரித்திரத்திலேயும் எழுதப்படவில்லை. ஆகவே சோமநாதயோகி அவர்களைப் பற்றிக் கொஞ்சம் சொல்வோம்.

பிரம்மேந்திராளுடைய தகப்பனுர் சோமநாதயோகி தாயார். பார்வதிதேவி. அவருக்கு யோகிப்பட்டம் இளமைப் பருவத்திலேயே வந்துவிட்டது. அந்த யோக மகிமையினுலே நீண்ட காலம் இந்த உடலோடு வாழலாம் என்று நினைத்துக்கொண்டு குண்டலினி யோகத்தை அப்யசித்தார். பிராணபந்தம் செய்யும் முறையைக் குண்டலினி யோகம் என்பர். அதிலே வெற்றியும் பெற்ருர். பிரம்மச்சரிய விரதம் அனுஷ்டித்தால்தான் குண்டலினி யோகம் நல்ல முறையிலே பலன் தரும். அநிமா, மகிமா, கரிமா, லகிமா, பிராப்தி, பிரகாமியம், ஈசத்வம், வசித்வம் என்று சொல்லப்பட்ட அஷ்டசித்திகளும் கைகூடும் என்று சாஸ்த்திரங்களிலே சொல்லப்பட்டுள்ளது. அதை அனுபவித்தே ஆகவேண்டுமென்ற எண்ணத்திலே பிரம்மச்சரிய விரதத்தைக் கைக்கொண்டு சோமநாத யோகி யோகத்தைப் பயின்று வந்தார்.

சோமநாத யோகியினுடைய தாய் தந்தையர் தம் புத்திரன் 25 வயதாகியும் திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்ற எண்ணம் இல்லாமலே இருக்கிருனே என்று கவலைப்பட்டனர். மகனுக்குத் திருமணம் முடித்து விட்டால் வானப்பிரஸ்தாச்சிரமம் மேற்கொண்டு பஞ்சயச்ஞங்களைச் செய்து வயோதிகம் வந்தபிற்பாடு சொர்க்காதி போகங்களைப் பெறவேண்டும். அதற்கும் மேற்பட்ட மெய்மை நிலையை அடையவேண்டும் என விரும்பினுர்கள்.

ஒரு தினத்திலே புத்திரனை அழைத்து திருமணம் செய்து கொள்ள வேண்டும் எனக் கேட்டார்கள். தனக்குத் திருமணம் செய்துகொள்ளப் பிரியமில்லை என்று சொல்லி விட்டார் சோமநாத யோகி. நாலைந்து மாதங்கள் கழிந்தன. மீண்டும் அவரை அழைத்துப் பேசலுற்றனர். 'நாங்கள் தவம் செய்ய வேண்டியவர்களாக இருக்கிறோம். வீட்டிலே விளக்கு வைக்க ஒரு ஆள் வேண்டும் என்று சொல்வார்கள். ஒரு சந்ததி அநட்சந்ததி வந்துகொண்டே இருக்க வேண்டும். அந்தச் சந்ததியினாலே நாட்டுக்கு நலன் கிடைக்கும் என்று பெரியவர்கள் சொல்வார்கள். ஒரு சந்ததியை நாங்கள் உண்டுபண்ணி விட்டோம். நீயும் திருமணம் செய்து கொண்டு ஒரு சந்ததியை உண்டுபண்ணி விடவேண்டும். நீ திருமணம் செய்து கொண்டால் நாங்கள் வானப் பிரஸ்தாச்சிரமத்தைக் கடைப்பிடித்து எங்கள் வாழ்க்கை உயர்ந்து போவதற்கு ஏதுவாக இருக்கும். தாய்தந்தையரது வார்த்தைக்குப் பதில் சொல்லிப் பழகக்கூடாது' என வற்புறுத்தினர். சோமநாத யோகியும் அப்படியே ஏற்றுக் கொண்டார். பதில் சொல்ல முடியாத சூழ்நிலையில் தாயிற் சிறந்தொரு கோயிலுமில்லை, தந்தை சொல் மிக்க மந்திரமில்லை. அவர்கள் சொல்கின்ற வார்த்தையைக் கடவுள் வார்த்தையாக ஏற்று நடக்கவேண்டுமென்பது இந்து தர்மத்தின் ஐச்வர்யம். சொற்களை அப்படியே ஏற்கவேண்டுமாம். அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வமன்றோ! திருமணம் நடந்தது.

பார்வதிதேவி என்ற ஒரு அம்மையைத் திருமணம் செய்து வைத்தார்கள். இவர் இல்வாழ்க்கை ஏற்றுக் கொண்டவுடனே அவரது தாய் தந்தையர் வானப்பிரஸ்தாச்சிரமம் ஏற்றுக் கொண்டனர். பஞ்ச யக்ஞங்களைச் செய்துகொண்டே சரீரம் உள்ளவரை தவம் செய்து வீடு பேறடைந்தனர்.

சோமநாத யோகியும் பார்வதிதேவியும் கடுந்தவம் இயற்றினர். பிரம்மச்சரிய விரதத்தைக் கடைப்பிடித்து சோமநாதயோகி யோகம் பயின்று வந்தார். அதிலிருந்து மாறுபடவேயில்லை. 15 வருடங்கள் கழிந்தன. அவருக்கு 40 வயது ஆகிவிட்டது. 25ல்

திருமணம் முடித்து 40 வயதாகியும் ஒரு சந்ததி உண்டுபண்ண வேண்டும் என்ற எண்ணமே இல்லாமல் அவர் இருக்கிறார் என்ப தைப் பார்வதிதேவி தெரிந்துகொண்டு அவரிடம் 'சுவாமின்! 15 வருடமாகிறது திருமணம் நடந்து திருமணம் செய்து கொண்ட தம்பதியருக்கு ஒரு சத்புத்திரன் வேண்டுமென்று சொல் வார்களே" எனப் பணிவோடு கேட்டார். அதற்குச் சோமநாத யோகி சொல்வார்! சத்புத்திரன் வேண்டுமென்று விரும்புவது பெரியோர்களது அபிப்பிராயம். உன்னுடைய வாக்கிலிருந்தே வந்துவிட்டது சத்புத்திரன் என்று. ஆனால் சத்புத்திரன் வேண்டு மென்றால் கோடிக்கணக்கான மந்திர ஜபம் செய்யவேண்டும். உன்னுடைய உடலின் இரத்தத்திலுள்ள அணுக்களெல்லாம் ராம நாமத்தைச் சொல்லவேண்டும். அப்பொழுது உடலும் பௌருஷம் பெற்றிருக்கும். உள்ளமும் புனிதத்வம் பெற்றிருக்கும். அப்பொழுது ஒரு கெர்ப்பம் உண்டானால் அந்த கெர்ப்பத்தில் உயர்ந்த அறி வாற்றல் நிறைந்த ஒரு மகரிஷி வந்து புகுவார். அது நாட்டுக்கு நல்லது' எனக் கூறினார்.

தாய் தந்தையர் எண்ணங்கள் எவ்வளவு உயர்ந்ததாக இருக் கிறதோ அந்த அளவு யோக்கியதை உடைய ஜீவன் கெர்ப்பத் தில் புகும். கெர்ப்பத்தில் உயிர் எங்கேயோ இருந்து வந்து புகுவதே தவிர உடலுக்குள்ளேயே உயிர் அல்ல. ஏழாம் மாதம் உயிர் வந்து புகுமென்று சாஸ்திரம் சொல்லும். 'வேதநூல் பிராயம் நூறு மனிதர்தாம் புகுவாரேனும்' என்பது திருவாய் மொழி. அதுவரை பிண்டம்தான் உண்டு பண்ணுவார்கள். அந்தப் பிண்டம் எந்த அளவுக்கு யோக்கியதை உள்ளதாக இருக்கிறதே, அந்த அளவு யோக்கியதைக்கு உரிய ஜீவன் எங்கேயோ உடலை விட்டவுடனே இந்த உடலிலே வந்து புகுந்து கொள்ளும். உதாரணமாக தின வாடகை ரூ 300 அல்லது 500 என வசூலிக்கும் விடுதி அறைகளிலே ஐஸ்வர்யம் படைத்தவர்கள்தான் சென்று தங்குவார்கள். அவர்கள் தின வாடகை ரூ 5 அல்லது 10 எனக் கேட்கும் விடுதிகளுக்குப் போவார்களா? மாட்டார்கள், இதுபோன்று நாம் எந்த அள

வுக்கு உடலை உண்டு பண்ணி வைத்திருக்கிறேமோ, கரு உண்டு பண்ணி அதை எந்த அளவுக்கு அருளோடு வளர்த்திருக்கின்றேமோ, அதிலே புகும் உயிர் எங்கேயோ இருந்து வந்து புகுவதனாலே இதன் யோக்கியதை தெரிந்து கொண்டு புகும் என்பார்.

பூக்கமழ் நாற்றம் கொண்டு பொறிவழி போகுமாபோல்
தீக்கனல் கின்ற வேலோய் ஜீவன் என்கின்ற சீரோன்
ஆக்கையை எய்தும் போதும் அந்தை விட்டேகும் போதும்
போக்கரிதாய ஆறு புலன்களை கொண்டு போமால்

—பகவத் கீதை

புஷ்பத்தினுடைய வாசனையை காற்று இழுத்துக்கொண்டு சென்று வெகுதூரத்திலுள்ளோருக்கும் மணம் தரும். காஷ்மீரில் குங்குமப்புஷ்பம் ஆகஸ்ட்மாதத்திலே பூக்கும் காற்றுகொண்டுவர பல மைல்களுப்பாலேயே அந்த வாசனை வரும். அதுபோல்உலக வாசனைகளையெல்லாம் சேகரித்து வைத்திருக்கின்ற அந்த ஜீவன் எத்தனை வாசனையையும் சேகரித்து வைத்துள்ள மனத்தோடே அதையும் எடுத்துக்கொண்டு வாசனையைச் சேகரிக்கின்ற இந்திரியங்களின் எண்ணங்களோடு ஜீவனுகிய அபிமானி அடுத்த உடலிலே புகுவான் என்று கூறப்படுகின்றது.

பூக்கமழ் நாற்றம் கொண்டு பொறி வழி போகுமாபோல்— மலரினது வாசனையை காற்று வெகு தொலைவு கொண்டு செல்வது போன்று பொறி—காற்று, இந்திரியங்களையும் குறிக்கும்.

"ஜீவன் எரிகின்ற சீரோய்—ஜீவன் உலகப் பொருட்களை மட்டும்தான் சேகரித்து வைக்கும்.

மெய்பொருளைச் சேகரிக்க ஆரம்பித்தால் அமிழ்ந்து போய் விடும்—உப்பு' சமுத்திரத்தின் ஆழங்காணப் போவது போலத் தான் உப்பு சமுத்திரத்தில் கலந்து விடுமன்றே! தன்னை அறிய வேண்டுமென விருப்பம் வந்துவிட்டால் ஜீவத்தன்மை அழிந்து மெய்ப்பொருளாக மாறும்.

ஆக்கையை எய்தும்போதும் அதனை விட்டேகும் போதும்—ஆக்கை—சரீரம்—ஒரு சரீரத்திலே புகுகின்ற சந்தர்ப்பத்திலும், ஒரு சரீரத்திலிருந்து வெளியே போகும்போதும் போக்கரிதாய ஆறு புலன்களைக் கொண்டு போமால்—பஞ்சேந்திரிய வாசனையை அபிமானித்துக் கொண்டிருக்கப்பட்ட ஜீவன் மனதையும்சேர்த்து மனது சென்றால் தானே பஞ்சேந்திரியங்கள் வாசனை அறியும்—மனதோடு சேர்த்துக் கொண்டு பஞ்சேந்திரிய வாசனை எடுத்துக் கொண்டு அந்த ஜீவன் அடுத்த உடலிலே போய் புகுந்துவிடும்.

இது உபநிஷத்துக்களின் கருத்துக்கள். இதையெல்லாம் கற்றுத் தெரிந்து கொண்டவர்களல்லவா சோமநாத யோகி? ஆகவே பார்வதி தேவியின் உடம்பிலுள்ள அணுக்களெல்லாம் ராம நாமம் சொல்ல வேண்டும் என்று கூறினார். அம்மையும் 'மந்திரம் சொல்லிக் கொடுங்கள். சொல்கிறேன்' என்றார். சோமநாத யோகி மந்திரம் சொல்லிக் கொடுக்க, பார்வதிதேவி நெடுங்காலம், நிரந்தரம், நேயத்தோடு, நியமத்தோடு அப்யாசம் செய்து வந்தார்.

ராமநாமம் சொல்லச் சொல்ல உடம்பிலுள்ள ரத்தமும் ராம நாமம் சொல்லும். உடல் பௌருஷம் பெறும். பார்த்தாலே உடல் ஆரோக்கியம் பெருகுவது தெரியும். அழகு கூடும். தெளிவு கிடைக்கும், ராமநாமத்தை உண்மையாக உள்ளத்தோடு ஒன்றி சொன்னால்தான் தெளிவு, அழகு, ஆரோக்கியம், ஆயுள் விருத்தி அனைத்தும் பெருகும். அம்மையும் உள்ளன்போடு ராமநாமம் சொல்லத் தொடங்கினார்கள், இரவும் பகலும் எந் நேரமும் ராமநாமமே அவரது மூச்சாக இருந்தது. படுத்து நன்றாக உறங்கும் போது பார்வதி என அவர் அழைத்தால் அந்த அம்மையார் ராம் ராம் ராம் எனத் துதித்துக் கொண்டேதான் எழுவார்கள். அந்த அளவுக்கு ராமநாம ஈடுபாடு முதிர்ந்து விட்டது

'நான் மறக்கினும் சொல்லும் நா நமச்சிவாயவே!
'நற்றவத்தவர் உள்ளிருந்து ஓங்கும்
நமச்சிவாயத்தை நான் மறவேனே!

என வள்ளலார் பாடுகின்றார். வாக்கு சொல்லிக் கொண்டே இருக்கலாம். மனம் வேறு காரியங்களைச் செய்யலாம் என்கிறார்கள் பெரியவர்கள். வாக்கினாலே சொல்லிச் சொல்லிப் பழகி விட்டோமானால் அது உள்ளத்திலே பதிந்து போய்விடும். பார்வதி தேவியும் அப்படிப் பழகிவிட்டார்கள்.

ஒரு தினத்திலே இருவருமாக யாத்திரை சென்று இராமேஸ்வரத்திலே தங்கியிருக்கின்ற காலத்திலே ஒருநாள் பார்வதி தேவியின் சொப்பனத்திலே ஒரு சத்புத்திரன் கிடைக்கும் என்று ராமநாதருடைய அநுக்கிரகம் கிடைத்தது. இதனை சோமநாத யோகியும் தமது சொப்பனத்திலே அப்பொழுது தெரிந்து கொண்டார். தேவியும் எழுந்து வந்து கணவனை வணங்கி எழுந்தார். சோமநாத யோகி, 'பார்வதி! நீ கண்ட கனவை நானும் கண்டேன். இனி நாம் ஊருக்குப் போவோம் வா' என அழைத்துக் கொண்டு மதுரை வந்து சேர்ந்தார் பத்து மாதம் கழித்து தங்க விக்கிரகம் போன்ற அழகான ஆண் குழந்தை பிறந்தது. பிறந்தவுடனே அக்குழந்தைக்கு சிவராமகிருஷ்ணன் எனப் பெயர் சூட்டினார். ராமர் சிவனைப் பூஜித்த இடத்திலே அநுக்கிரகம் கிடைத்தமையால் சிவராமகிருஷ்ணன் என்று தீர்மானித்தார். நீண்ட நாட்களாகக் குழந்தையில்லாது இருந்து பிக்ஷையாகக் கிடைத்ததனால் பிக்ஷு என்று அழைத்தார்கள். சிவராமகிருஷ்ணனுக்கு மூன்று வயதாகு முன்னமே சோமநாத யோகி தவம்புரிய இமயபர்வதம் சென்றுவிட்டார்.

# இரண்டாம் அத்தியாயம்

## இளமையும் கல்வியும்

இளமைப் பருவத்திலேயே சிவராமகிருஷ்ணனை வேதபாட சாலைக்கு அனுப்பினார்கள். முற்பிறவியில் சாஸ்திரம் கற்றவரா கையினால் வேதங்கள் நான்கினையும் வெகு சீக்கிரத்தில் அவர் கற்றுத் தேர்ந்தார். அதன் ஆழ்ந்த கருத்துக்களை அதிசீக்கிரத் தில் தெரிந்து கொண்டுவிட்டார், பழைய பாடம் போல. 'முன்னைப் பிறவியில் செய்த முதுதவம் பின்னைப் பிறவியிற் பெற்றால் அறியலாம்' என்ற திருமூலர் வாசகத்திற்கு உதாரண மாக வெகு சீக்கிரத்தில் சாஸ்த்திரங்களை அறிந்து கொண்டார். பெரிய கனபாடிகளும், சாஸ்த்திரிகளுமே அவரது சாஸ்த்திர அறிவு கண்டு அதிசயித்தனர்.

அவருக்கு சாஸ்த்திரம் கற்றுத் தந்த சாஸ்த்திரியார் இனி சிவராமகிருஷ்ணன் திருவிசை நல்லூர் ஸ்ரீதர வேங்கடேச அய்யாவாளிடத்திலே சென்று கற்றால்தான் மனம் சாந்தி பெறும் எனச் சொல்லிவிட்டார். இதைத் தாயாரிடம் சென்று ஆதர வோடு வணங்கி அநுமதி தரவேண்டும் எனப் பிரார்த்தித்தார். தாயார் புன்முறுவலோடு குளிர்ந்த பார்வை பார்த்து 'சிவராமா" நீ இன்னும் கொஞ்ச நாள் பொறுத்திரப்பா' என்று சொல்லி விட்டார்கள். தாய் சொல் துறந்தால் வாசகமில்லை. தாயார் வார்த்தைக்குப் பதில் சொல்லிவிட்டுப் போனால் அந்தக் காரியம் சித்தியடையாது. அதனால் எக்காரணம் கொண்டும் தாயார் வார்த்தைக்கு பதில் சொல்லக்கூடாது என்ற எண்ணத்தில் சிவ ராமகிருஷ்ணனும் பொறுத்திருந்தார். இதற்கிடையே பன்னிரண்டு வயதே நிரம்பிய சின்னக் குழந்தையான சிவராமகிருஷ்ணனுக்கு சீக்கிரத்திலேயே திருமணம் முடித்துவிடப் பார்வதிதேவி திட்டம் போட்டார்கள். மிக மிக உயர்ந்தவன் பார்வதியின் புத்திரன் எல்லாக் கலைகளையும் மூத்திரையிலேயே கற்றவன். அவனுக்குப் பொன்னும் பொருளும் கொடுக்க வேண்டுமெனப் பலர் முன் வந்தனர். தேடிக் கண்டுபிடித்து அருகதையுள்ள குலத்திலே

ஐந்து வயதே நிரம்பிய பெண் குழந்தையை அவருக்குத் திருமணம் செய்து வைத்தனர். அந்தப் பெண் குழந்தையின் தாய் தந்தையர் செய்ய வேண்டிய சீர்வரிசையெல்லாம் செய்து முடித்ததும் பார்வதிதேவியிடம் பெண்ணை கொஞ்சநாட்கள் தாங்களே பாதுகாத்து வளர்த்துபணிவிடை புரியும் பிராயம் வரும்பொழுது கொண்டு வந்து விடுவதாகக் கூறி அநுமதி வேண்டினர். பார்வதி தேவியும் சந்தோஷத்தோடு அனுப்பி வைத்தார்கள்: சிவராம கிருஷ்ணனுக்கோ அதைவிட சந்தோஷம் வந்து விட்டது இனி தாம் நினைத்தது போல கற்றுவர அநுமதி வேண்டி மிகப் பணிவோடு கேட்டுக் கொண்டார். தாயாரும் மகிழ்வோடு அநுமதி கொடுத்து திருவிசை நல்லூர் அய்யாவாளிடத்திலே கற்றுவர அனுப்பி வைத்தார்கள்.

ஸ்ரீதர வேங்கடேச அய்யாவாள் இடத்திலே சென்று கற்று வருங்காலத்திலே சில நாட்களுக்குள்ளாகவே அய்யாவாள் சிவராமகிருஷ்ணனுடைய சாஸ்த்திரத் தேர்ச்சி கண்டு வியப்படைந்தார். பொதுவாக சாஸ்திரங்களைக் கற்கிறோம். அநுபவம் பெறும் முறைகளைத் தெரிகிறோம். ஆனால் சிவராமகிருஷ்ணனோ சாஸ்த்திரங்களைக் கேட்கும் போதே அநுபூதி பெறுகிறான். அநுபவத்தின் முதிர்ந்த நிலைபெறுகிறான். ஆகவே இவனை இங்கே வைத்திருக்கக் கூடாது. பரமசிவேந்திராளிடம் அழைத்துச் சென்று கற்க ஏற்பாடு செய்ய வேண்டும் என எண்ணி பரமசிவேந்திராளிடம் அடைக்கலமாகச் செய்தார்.

சில மாதங்களுக்குள்ளாகவே அத்யாத்ம சாஸ்த்திரக் கருத்துக்களையெல்லாம் சிவராம கிருஷ்ணன் எளிதாகக் கற்று உணர்கிறார். ஏகச் சந்தக் கிராகியாக விளங்கினார். சிருங்கேரி சச்சிதானந்த சிவாபிநவ நரசிம்ம பாரதி மகா சுவாமிகள் இவருடைய பெருமையைச் சொல்லும் போது நிஜ குரு பரமசிவேந்திர சிலாகித விக்ஞான காஸ்டாய, எனத் தோத்திரப் பாடலிலே குறிக்கிறார். பரமசிவேந்திராள் என்ற குருவே சிலாகித்துப் பேசுவாராம் சிவராம கிருஷ்ணனை! அத்தகைய தீட்சண்யமான திருஷ்டியுடையவராக சிவராம கிருஷ்ணன் திகழ்ந்தார்.

# மூன்றாம் அத்தியாயம்

## பதவியும் பணியும்

மைசூர் சமஸ்தானத்திலே சமஸ்தான வித்வான் அமைப்ப தற்காக பெரிய வித்வான் கிடைக்காமல் மந்திரி பிரதானிகள் பல தேசங்களில் தேடி வரும்போது தஞ்சாவூரில் இவரது பெருமை யனைத்தையும் கூறக்கேட்டுத் தெரிந்து கொண்டார்கள். பரம சிவேந்திராளை அணுகி தண்டாகாரமாக நமஸ்காரம் செய்து, 'நற்குணமுடைய தங்களது சீடர்களிலே சிவராமகிருஷ்ணன் உயர்ந்த சீடர் எனக் கேள்விப்படுகிறோம். சகல கலைகளையும் கற்றவராகத் தெரிகிறது. மைசூர் சமஸ்தானத்திலே பெரிய வித் வான் இல்லை. தயை கூர்ந்து இவரை அனுப்பி வைக்கவேண்டும்' எனக் கேட்டுக் கொண்டனர். சிவராம கிருஷ்ணனை அனுப்பி வைப்பதன் மூலம் தமக்கு பெருமை கிடைப்பதல்லாமல் இராஜ் ஜியத்தில் ஒரு நல்லது நடக்கட்டும் என்று நினைத்து பரம சிவேந்திராள் இவரை அனுப்பி வைத்தார்கள்.

மைசூர் சமஸ்தான வித்வானாக சிவராமகிருஷ்ணன் அமர்ந் தார். வருகின்ற வித்வான்களையெல்லாம் பரீட்சிக்கின்ற பணியை மகாராஜா இவரிடம் விட்டுவிட்டார். இவர் பரீட்சித்து என்ன பரிசு கொடுக்கலாமென்று கூறுகிறாரோ அந்தப் பரிசையே கொடுக்கும்படி மந்திரிகளுக்கும் உத்தரவிட்டார். இவர் எல்லாக் கலைகளிலும் முதிர்ந்த தேர்ச்சி பெற்றவராகையால் வந்த வித் வான்கள் அனைவரும் இவரால் தோற்கடிக்கப்பட்டனர். ஆயிரம் ரூபாய் பரிசு கொடுக்கவேண்டிய இடத்திலே ஐநூறு ரூபாய் பரிசு தான் கொடுக்கும்படிச் சொல்வார். 64 கலைகளிலே எந்தக் கலை யாக இருப்பினும் அதன் கருத்துக்களை இவர் தெளிவுறத் தெரிந்து வைத்திருந்தார். 32 ராகங்களிலே ஏதேனும் ஒரு ராகம் இன் னொன்றுடன் கலந்து விட்டால் உடனே கண்டுபிடித்துச் சொல்லி விடுவார்.

இந்த நிலையில் தஞ்சாவூரிலுள்ள சாஸ்திரிகளில் ஒருவர் அறிந்தார். பெயர் கோபால கிருஷ்ண சாஸ்திரி என்பதாக ஞாபகம். சிவராமகிருஷ்ணனை வெற்றிபெற்று தான் சமஸ்தான வித்வானாக வேண்டுமென நினைத்து மைசூர் சென்றார். வித்வத் சபையிலே மேடைமீது சிவராமகிருஷ்ணன் உட்கார்ந்திருக்கிறார். தூரத்தில் வரும்போதே அவரது பார்வை கோபாலகிருஷ்ண சாஸ்திரிகளைக் கவர்ந்தது. அருகே வந்த சாஸ்திரிகள் தண்டாகாரமாக வணங்கி, 'குருவே! தங்களுக்குச் சேவை செய்ய வந்திருக்கிறேன்' என்று கூறினார். இருக்கச் சொல்லிவிட்டார் சிவராமகிருஷ்ணனும். யாராவது உண்மையான அன்போடு சேவை செய்ய வந்தால் வேண்டாமென்று சொல்லக்கூடாது சேவை செய்ய ஏற்றுக் கொள்கிறார். ஆப்த, அங்க, தான, சத்பாவ மென்று சதுர்வித சேவை.

ஆப்தப் பணிவிடை என்று சொன்னால் குரு நினைப்பதை சிஷ்யன் செய்வது, தகப்பன் நினைப்பதை மகன் செய்வது, கணவன் நினைப்பதை மனைவி செய்வது. ஏவா மக்கள் மூவா மருந்து இன்னது செய் என்று சொல்லு முன்பே அதைத் தெரிந்து செய்வது ஆப்தப் பணிவிடை இதற்குக்கணவனுடைய உள்ளத்தேயே குடிகொண்டிருந்தால்தான் ஆப்தப் பணிவிடையை மனைவி செய்ய முடியும்.. அப்படிச் செய்தவர்கள் அனுசூயாதேவி, வாசுகி அம்மையார் அதனாலேயே வள்ளுவரும் வாசுகி அம்மையைத் தோத்திரம் செய்கிறார்.

'தெய்வம் தொழாஅள் கொழுநற் றொழு தெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை'

என்பது குறள்.

கடவுள் வேறு எங்கேயோ இருப்பதாக நினைக்க மாட்டார்களாம் கணவனே கடவுள் என எண்ணுவர். கொழுநற் றொழுதெழுவாள்—தொழுது எழுவாள் என்ற கருத்து சிறப்புடையது. எழுந்தானே தொழவேண்டும். உறங்கும்போது எப்படித் தொழுவது என ஐயம் ஏற்படலாம். பரிமேலழகர் அதற்கு பதில் சொல்கிறார். கணவனுடைய எண்ணத்தை மறந்திருந்தாலல்லவா எழுந்து தொழ முடியும்? மறக்காமல்தானே உறங்குகிறாள் கற்புடைய

மங்கை! ஆகவே எழுந்து தொழுவதில்லை. உள்ளத்திலேயே உள்ள கணவனைத் தொழுது எழுவாள் என்று கூறினார்கள். ஒருவருடைய உள்ளத்திலேயே குடிகொண்டிருந்தால்தான் ஆப்தப் பணிவிடை செய்யமுடியும். நினைத்ததை அறிந்து செய்ய முடியும்.

அடுத்தது அங்கப்பணிவிடை. சரீரத்திற்கு வேண்டிய சேவை. மற்றது தானப் பணிவிடை. தந்தையின் அலுவல்களில் மகனும், குருவின் அலுவல்களில் சிஷ்யனும் பங்கெடுத்துக் கொண்டு செய்வது தானப் பணிவிடை. உடை, படுக்கும் இடம் பரிசுத்தம் செய்தற் போன்றது தானப் பணிவிடை.

சத்பாவப் பணிவிடை என்பது குருவைக் கடவுளாக நினைப்பதாம். வேறு கடவுள் இல்லை, அதே போன்று கணவனையே மனைவி கடவுளாக நினைப்பது. தந்தையையே மகன் கடவுளென நினைப்பது.

குல மகட்கு தெய்வம் கொழுநனே
மன்ற புதல்வர்க்குத் தந்தையும் தாயும்
அறவோர்க்கு அடிகளே தெய்வம்
அனைவோர்க்கும் தெய்வம்
இலை முகப் பைம்பூண் இறை.

என்றார் குமரகுருபர சுவாமிகள்.

இவ்வாறு சதுர்வித சேவைகளை கோபாலகிருஷ்ண சாஸ்திரிகள் ஒழுங்காகச் செய்யத் தொடங்கி விட்டார். அவரது சேவையில் மகிழ்ந்து சிவராமகிருஷ்ணன் ஆசீர்வாதம் பண்ணினார். சமயம் பார்த்து சாஸ்திரியார் அவரிடம் அவரது பரமகுருவைத் தரிசிக்க வேண்டுமென்று விரும்புவதாகச் சொன்னார். பரமகுரு எனில் குருவுக்கு குரு. இவரும் பரமசிவேந்திரரைத் தரிசிக்கும் விதி முறைதனைச் சொல்லி வதியும் இடமும் வழியும் கூறி அனுப்பி வைத்தார்.

பரமசிவேந்திரரைக் கண்டவுடன் சாஸ்திரியார் தண்டாகாரமாக வணங்கி, சிறிது நேரம் அன்பான வார்த்தைகளாலே அவ

ரைப் புகழ்ந்தார். பின்னர் சிவராமகிருஷ்ணனைப்பற்றி விரித்துரைக்க ஆரம்பித்து விட்டார். 'தேவரீரின் சிஷ்யக் கோடிகளிலே மிக மிக உயர்ந்தவர் சிவராமகிருஷ்ணன். அவர் சமஸ்தானத்திலே வித்வானாகப் பதவியில் இருப்பதால் வருகின்ற வித்வான்களை வெற்றிபெறுவதிலேயே குறிக்கோள் கொண்டிருக்கிறார். வித்வான்கள் விரும்பிய பரிசு கிடைப்பதில்லை. இதனால் இராஜ்ஜியத்திற்கு கௌரவக் குறைவு ஏற்பட வழியாகிறது. மேலும் வித்வான்களை ஜெயிக்க கேள்வி சேகரிப்பதிலேயே கருத்து வைப்பதால் தவம் செய்ய நேரமில்லை. இன்னும் மகாராஜா சமஸ்தான வித்வானை அழைத்து வா என்றால் இவர் அவர் முன்னால் கை கட்டி நிற்கவேண்டும். ஆனால் அவ்விடத்திலிருந்து வெளியேறி தவம் செய்ய ஆரம்பித்தால் அவரை தரிசிக்க மகாராஜாக்கள் காத்துக் கிடப்பார்கள்' என்று கூறினார். இது உண்மையே எனப் பரமசிவேந்திராள் அறிந்து 'நீ சிவராமகிருஷ்ணனிடம் நான் அழைத்ததாகத் தெரிவித்துவிடு' என்றார்.

சில தினங்கள் கழித்து மைசூர் சென்ற சாஸ்திரியார் அவரை வணங்கி அவரது குருநாதர் அவரைத் தரிசிக்க விரும்புகிறார் என்று கடுமையான வார்த்தை கூறினார். அப்படியே அவரது கண்களிலிருந்து கண்ணீர் வந்தது. குருநாதர் தரிசிக்க விரும்புகிறார் என்று சாஸ்திரியார் சொல்லக்கூடாது. உடனே ராஜினாமா செய்து விட்டு குருநாதரைக் காண சிவராமகிருஷ்ணன் புறப்பட்டு விட்டார்.

❧ ❧ ❧ ❧ ❧

# நான்காம் அத்தியாயம்

## தவமும் யோகமும்

குருநாதரை வணங்கி எழுந்து நின்ற சிவராமகிருஷ்ணனை நோக்கி பரமசிவேந்திராள், 'ஊரார் வாயெல்லாம் அடக்கக் கற்ற நீ உன் வாயை அடக்கக் கற்றுக் கொள்ளவில்லையே" எனக் கேட்டார். அந்த நிமிடத்திலிருந்தே இனிப் பேசுவதில்லை என்று தீர் மானித்து மௌனியானார். குருநாதரும் அவருக்கு சந்நியாசம் கொடுத்து சதாசிவம் என்ற பெயரையும் சூட்டி 'உனக்குப் பிரிய மான இடத்திற்குச் சென்று நீ தவம் இயற்றலாம்" எனச் சொல்லி விட்டார்.

சதாசிவம் புறப்பட்டு நெரூர் வந்து சேர்ந்தார். நிர் ஜனப் பிரதேசம், மலையின் உச்சி, நதிக்கரை, அழகிய வனம், சமதரை இவை தவம் பண்ணுவதற்குத் தக்க இடம். நெரூரை அடைந்த சதாசிவம் தவம் பண்ணுவதற்குத் தகுந்த இடம் என அறிந்து தங்கினார். சகல கலைஞானம் உள்ளத்தே நிரம்பி இருக்கிறது. அய்யாவாள், பரமசிவேந்திராள் இருவரிடமும் சகல சாஸ்திரங் களையும் கற்றறிந்தார். மந்திர யோகம்,பரிசயோகம், பாவயோகம் அபாவயோகம், மகாயோகம் என்ற ஐந்து யோகங்களையும் அநுஷ்டிக்க ஆரம்பித்தார்.

ஓங்காராதிகள் அநுசந்தா னத்தாற் பரத்தில்
உள்ள மடங்குதலே மந்திரயோகம் அதனோ
டீங்காகு மநபவந மொன்றாய் மூலத்தினிருஞ்
சுழினை வழி சென்று சென்னி நடுவிருந்த
தேங்கான்ம வொளியின் மனோலயமாதல் பரிசம்
சிரம் துறக்கம் செவிதிசைகள் இரு சுடர்கள் விழி தீ
யாங்காய முகம் உந்தி விசும்பு நிலம் பதமாம்
பரமன் உருவாய விராட்புருட வடிவெனினும்
அன்றி அளவுறு பெருந்தோட் படைபணியோடுற்ற
அண்ணல் வடிவெனினும் நினைந்தவயவங்கள் தம்மில்

ஒன்றொன்றை விடுத்து நின்ற அவயவி மாத்திரமாம்
உண்மையாம் பிரமத்தின் மனமடங்கல் [பாவம்
சென்றளவு கரணமுருவொரு பிரமந் தன்னில்
சிந்தையடங்குதல் அபாவம் படைப்பில் ஒழிவிற்
தன் தெரிதல் தெரியாமை யிடத்திரேர் பரிசாய்த்
தன் வடிவாம் பிரமத்தின் மனமிறல் மாயோகம்.

இந்த யோகங்களில் வெற்றி பெற்றார் சதாசிவம். மந்திரத்தை இடைவிடாமல் ஜெபித்ததால் வேறு விஷய சிந்தனை அற்றுத் தொலைந்தவுடனே மெய்ப்பொருளாகமாறிவிடுவார்களாம். அதற்கு மந்திரயோகம் என்று பெயர்.

சுவாசத்தோடு மந்திரத்தைச் சேர்த்துப் பழகிக் கொள்வது பரிசயோகம். இதனை குண்டலினியோகம் என்றும் கூறுவர். இதனால் ஆகாய கமனம், பரகாயப்பிரவேசம், பூமியில் புதைந்திருக்கிற தன்மை, முதிர்ந்தால் அநிமாதிஐச்வர்யங்களும் சித்தியாகும். உடலோடு நீண்ட நாட்களுக்கு வாழலாம். இந்த நியமங்களைக் கடைப்பிடித்து அதிலே வெற்றிபெற்றார். ஆகாயத்திலே பறந்தார். பிறர் கண்ணுக்குத் தெரியாமல் போய் வந்து கொண்டிருந்தார். மண்ணுக்குள்ளேயும் புதைந்து கிடந்தார். இது பரிசயோகம்.

உலகத்தில் காண்கின்ற பொருள்களெல்லாம் மண்ணிலிருந்தே உண்டானதென்று அறிவோம். இந்த மண் கடவுள் வடிவம். எல்லாமே கடவுள் வடிவம். அது மெய்ம்மை.

நில நீர் நெருப்புயிர்
நீள் விசும்பு நிலாப்பகலோன்
புலனாய மைந்தனோ
டெண் வகையாய்ப் புணர்ந்து நின்று
னுலகே ழெனத் திசை
பத்தெனத்தா னொருவனுமே
பலவாகி நின்றவா
தோணோக்க மாடாமோ

என்பது திருவாசகம்.

பிரிதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம், சூரியன், சந்திரன் ஜீவன் இந்த எட்டும் சச்சிதானந்த வடிவத்திலே கற்பிக்கப் பட்டவை. கற்பனை கடந்த ஜோதி கடவுள். அதனால் கற்பனை வடிவம் கடவுள் என்று பாவனை பண்ணிப் பழகவேண்டும். உல கத்தைத் தோன்றச் செய்து, அவ்வுலகத்தில் கண்ணுக்குத் தெரி கின்ற மனத்தால் நினைக்கும் 'பொருள்களெல்லாம் கடவுள் என்று பாவனை செய்து விடுகின்றோம். அப்போது எந்தப் பொருளிடத்தி லும் ஆசையும் துவேஷமும் வராது. அந்தப் பாவனையை பெருக்கி விட்டோமானால் கற்பனைப் பொருட்களெல்லாம் கற்பனை கடந்த வடிவமாகும். அந்த கடவுள் என்ற பதத்தின் மெய்ம்மை வடிவம் என்ற பாவனை முதிர்ந்துவிட்டால் பாவயோகம்.

அடுத்த நிலையில் எல்லாப் பொருட்களும் கடவுள் வடிவமே என்ற எண்ணத்தை விட்டுவிட்டுதானே கடவுள் என்று எண்ணு கிறோம், தனக்கு அந்நியமாகக் கடவுள் இல்லை என்ற பாவனை யிருந்தால் அபாவயோகம்.

மகாயோகம் என்பதுதானே எல்லாம் என்றஎண்ணத்தையும் மறந்துவிடுவது ஆகும். அந்த எண்ணத்தை விட்டுவிடுதல் மகா யோகம். இந்த ஐந்து யோகங்களும் பூர்த்தியடைந்த பிற்பாடு சதாசிவ பிரம்மத்தின் அதியற்புத போகசித்திகள் நடந்துள்ளன. அவற்றில் சிலவற்றை இங்கு காண்போம்.

∴ ∴ ∴ ∴ ∴

# ஐந்தாம் அத்தியாயம்

## சித்திகளில் சில

கொடுமுடிக்குப் பக்கத்திலே அகத்தியம் பாறை என்ற ஒரு இடம் உள்ளது. காவேரிக்கு நடு மையத்திலே ஒரு பெரும் பாறை. அதைச் சுற்றிக் கொண்டு தண்ணீர் ஓடுகிறது. பல சமயங்களில் அந்தப் பாறையின் மீது சதாசிவ பிரம்மம் உட்கார்ந்து கொள்வார். எங்கே போய் தவம் செய்தாலும் வயது வந்தவர்கள், விவேகம் உள்ளவர்கள் உபத்திரவம் கொடுக்க மாட்டார்கள். ஆனால் குழந்தைகள் அறியாமல் உபத்திரவம் கொடுத்து விடுவார்கள். சின்னக் குழந்தைகள் தண்ணீரில் வர முடியாதல்லவா? பத்து நாட்கள் வரை கூட இவர் அந்தப் பாறையிலேயே உட்கார்ந்து விடுவார். அப்படிப் பாறைமீது உட்கார்ந்திருந்த ஒரு தினத்திலே காவேரி பெருக்கெடுத்து இவரை உருட்டிக்கொண்டு சென்று மண்ணிலே புதைத்துவிட்டது. சரீரம் மண்ணிலேபுதைந்து போய்விட்டது. சில தினங்களில் தண்ணீர் வற்றியது. சதாசிவ பிரம்மத்தை அப்பகுதியில் காணாத மக்கள் பல இடங்களிலும் தேடிப் பார்த்து ஓய்ந்தனர்.

ஆறு மாதங்களோ அல்லது ஆறு வருடங்களோ ஓடி மறைந்தன. கட்டிடம் கட்ட மணல் வேண்டி கொடுமுடியிலிருந்து வண்டிகள் வந்தன. ஒரு இடத்திலே நல்ல மணல் உள்ளதென்று வண்டிக்காரர்கள் தோண்டினர். அங்கே பெருமணல் கிடைக்கக் கண்டு சற்று ஆழமாகத் தோண்டத் தொடங்கினர். மண்வெட்டி புதைந்திருந்த சதாசிவ பிரம்மத்தின் தலையில் பட்டு காயம் ஏற்பட்டு இரத்தம் வந்தது. மக்கள் இவரை சதாசிவ பிரம்மம் என்றே அழைத்து வந்தனர். ஏனெனில் உடலையே மறந்து பிரம்மமாக இருக்கிறார், மெய்ப்பொருளாக இருக்கிறார் என்பதால் இரத்தம் வந்தவுடனே பயந்து போய்விட்டனர். கிராமத்திற்குப் போய்ச் சொல்லி கிராமமுன்சீப் பலரோடு சேர்ந்து வந்து பார்த்து இது சதாசிவ பிரம்மமே தவிர வேறு யாரும் இப்படி உயிருடன் இருக்க முடியாது என அறிந்து, சுற்றிலும் மணலை எடுத்து அவரை

1160



எழுப்பிவிட்டனர். பழரசங்களும் கஞ்சியும் கொண்டு தேய்த்து உடலைச் சூடாக்க புஷ்டி வந்து அவர் புறப்பட்டுப் போய் விட்டார். யாருடனும் பேசவில்லை. இப்படி நடந்த சித்திகள் பலப்பல.

புதுக்கோட்டை அரசரது திருவரங்குளம் காடுகளையடுத்த நிலங்களின் வழியாக ஒரு சமயம் உடலை மறந்து எங்கேயோ சதா சிவ பிரம்மம் போய்க் கொண்டிருந்தார். அப்போது அங்கே வைக்கோல் போர் போடும் வேலை மும்முரமாக நடந்து கொண் டிருந்தது. ஒரு வரிசை போட்டாகிவிட்டது. அந்த வழியே சென்று கொண்டிருந்த பிரம்மம் ஏதோ தடுக்கி இரு வைக்கோல் சுமைகளுக்கிடையே விழுந்துவிட்டார். வைக்கோல் அவரை மறைத்துவிட்டது. இது வழி, வழியல்ல என்று இவருக்குத் தெரி யாது. இடையே கல் தடுக்கி விழுந்தாலும் 10 நாட்கள் அப்படியே கிடப்பார். பின்னுல் வைக்கோல் சுமை கொண்டு வந்தவர்கள் மேலே மேலே சுமைகளைப் போட்டனர். பெரிய வைக்கோற் போர், பத்தாயிரம் சுமை போட்டாகிவிட்டது. சதா சிவ பிரம்மமோ அதனடியிலே கிடக்கின்றுர். எழுந்து வர வேண்டுமென்றுல் வந்துவிடலாம். ஆனுல் அவருக்கு அந்த எண்ணமே கிடையாது. ஒரு வருடம் கழிந்தது. மாடுகளுக்காக வைக்கோல் எடுத்து எடுத்து போர் குறைந்தது. இறுதியாக சுமை எடுக்கப்படும் பொழுது பிரம்மம் எழுந்து நடந்தார். அவரைப் பார்த்த வேலையாட்கள் மந்திரிகள் மூலம் மகாராஜா விடத்திலே சொல்லினர்.

மகாராஜா விஜய ரகுநாதத் தொண்டைமான் சாதுக்களிடத் திலே பிரியமுள்ளவர்: சாஸ்த்திரங்கள் கற்று உணர்ந்தவர் இராஜ்ஜிய பரிபாலத்தில் பல தோஷங்கள் வந்து சேர வழியுள்ள தல்லவா? அதனுல் ஏற்படும் பாவங்களை சாதுக்களை வைத்தே தீர்த்துக் கொள்ள முடியும் என நம்பியவர். அத்தகைய நற்குண முடைய அரசன் சதாசிவபிரம்மத்தை அரண்மனைக்குஅழைத்துச் சென்று விருப்பமுடன் சேவை செய்வார் என்று அறிந்தே மந்திரிகள் மகாராஜாவிடம் சென்று கூறினுர்கள்.

மகாராஜாவும் ஒரு பல்லக்கைக் கொண்டு வரச் சொல்லிவிட்டு தான் ஒரு குதிரையில் விரைந்து சதாசிவ பிரம்மம் வீற்றிருந்த

இடம் வந்து சேர்ந்தார். பிரதட்சண நமஸ்காரம் செய்து அரண்மனைக்கு எழுந்தருளப் பிரார்த்தித்தார். இவரோ பேசவில்லை. நடந்து திருவரங்குளம் காட்டில் முள் மரங்கள் மத்தியிலே சென்று அமர்ந்தார். அழைத்தும் வரவில்லை. அரசனும் அருகிலேயே ஒரு சின்னக்குடிசை அமைத்துக்கொண்டு அங்கேயே தங்கி இவருக்குச் சேவை செய்யத் தொடங்கினார். இடையிடையே இராஜாங்கக் காரியமாக அரண்மனைக்குச் செல்வதும் பெரும் பொழுது பிரம்மத்தின் சேவையிலுமாக எட்டு வருடங்கள் கழிந்தன.

ஒரு தினம் நமக்கு தீட்சை தரவேண்டுமென பிரம்மத்திடம் விரும்பிக் கேட்டார் மகாராஜா. பிரம்மமும் மகாராஜாவுக்கு தீட்சை தரலாம் என எண்ணினார் போலும்! மணலிலே மந்திரத்தை எழுதிக் காண்பித்தார். அந்த மந்திரத்தை மகாராஜா கற்றுக் கொண்டு, இந்த மணலை தன் அங்கவஸ்திரத்தில் எடுத்துக் கொண்டு அரண்மனை சென்று தங்கப் பேழையில் வைத்து பூஜை செய்யத் தொடங்கினார். அந்தப் பூஜை இன்னும் புதுக்கோட்டை அரண்மனையில் நடந்து வருகிறது.

சில நாட்களுக்குப் பிறகு மகாராஜா அவரிடம் சாஸ்த்திர சந்தேகங்களைக் கேட்க ஆரம்பித்தார். அப்போது சதாசிவ பிரம்மத்திற்கு பேச வேண்டுமென்ற எண்ணம் கிடையாது. பிரம்மம் பேச விரும்பவில்லையென்பதை மகாராஜா உணர்ந்து கொண்டு தமது தவறுக்காக வருந்தினார். எங்கு சென்றாலும் எப்படியும் சரீரத்தை உகுக்கும் காலத்தில் அடியேன் தங்களை தரிசிக்கும் வரமருள வேண்டும் என ஆழ்ந்த பக்தியோடு பிரார்த்தித்தார். பிரம்மமும் மகாராஜாவின் உத்தம குணங்களை அறிந்து 'உத்தமர் கோவிலிலுள்ள கோபால கிருஷ்ண சாஸ்த்திரிகளை அழைத்து வந்து நீ சாஸ்த்திரக் கருத்துக்களைக் கேட்டுத் தெரிந்து கொள் எனப் பணித்தார். மகாராஜாவும் அவ்வாறே செய்தனர். சில நாட்களில் பிரம்மம் அங்கிருந்து புறப்பட்டுப் போய் விட்டார்.

கரூரில் வசித்து வந்த சாஸ்த்திரிகளும் கனபாடிகளும் ஒரு சமயத்திலே சதாசிவ பிரம்மத்தை அணுகி, 'திருப்பதி சென்று வெங்கடாசலபதியைத் தரிசித்து ஆசி பெற்று வருவது மிகவும்

சிரமமாக இருக்கிறது. ஆகவே தேவரீர் எங்களை ஆசீர்வதித்து திருப்பதி வெங்கடாஜலபதியைத் தரிசித்தால் என்ன நன்மை உண்டாகுமோ அந்த நன்மை தான்தோன்றிமலை அப்பரைத் தரிசிக்க உண்டாக வேண்டுமாய் அருள் புரிய வேண்டும்' என வேண்டினர். அந்தக் காலத்தில் திருப்பதி செல்வதென்றால் கட்டை வண்டியில் உணவும், மாடுகளுக்குத் தீவனமும்கொண்டு செல்ல வேண்டும். அவர்கள் படும் இடர்களுக்கோ அளவில்லை. சதாசிவ பிரம்மமும் மகிழ்ச்சியோடு தான்தோன்றி மலை சென்று தான்தோன்றி மலையப்பரைப் பூஜித்து, ஜன ஆக்ரஷ்ண சக்கரம் ஒன்று எழுதி பூஜை செய்து அங்கு அமைத்தார். ஆகையால் அன்றும் இன்றும் தான் தோன்றி மலையில் வேண்டுவோர் வேண்டுவது கிடைக்கப் பெறுகிறது. புரட்டாசி மாதம் மூன்றாவது வாரம் சற்குரு சதாசிவம் தான்தோன்றிமலை அப்பரை பூஜை செய்த நாளை இப்போதும் மக்கள் சிறப்பாகக் கொண்டாடி வருகின்றனர்.

தஞ்சாவூருக்கருகில் 3 கல் தொலைவில் புன்னைவனக் காடுகள் உண்டு. அங்குள்ள புன்னைவனம் மாரியம்மன் கோவில் இன்றும் மிகவும் பிரசித்தமானது. அன்று அந்த புன்னை மரக்காடுகளிலே சதாசிவ பிரம்மம் அமர்ந்து கொண்டிருந்தார். அக்காலத்திலே மகாராஜாவாயினும் அதிக தூரம் நடந்தும் சற்றே குதிரையேறியும் இராமேஸ்வரம் செல்லுவது வழக்கம். அவ்வாறு தஞ்சாவூர் மகாராஜா தனது பெண் குழந்தையுடன் இராமேஸ்வரம் சென்று திரும்பினர். உஷ்ணம் பொங்கி குழந்தையின் கண்களிலிருந்து இரத்தம் வந்தது. பல ஔஷதங்களைப் பரிட்சிந்தும் குணம் காணவில்லை. ஆகவே மகாராஜா சமயபுரம் மாரியம்மனுக்கு வேண்டுதல் செய்தார். குழந்தையின் கண்நோய் நீங்கினால் தங்கத்தினால் கண் செய்து வைப்பதாக வேண்டிக் கொண்டார். அன்று இரவே மகாராஜாவின் கனவில் 'நான் இங்கிருக்க நீ சமயபுரம் போவதென்ன?' என அம்மன் திருவுளமருளினார்கள். விழித்துக் கொண்ட மகாராஜா தம் இராஜ்ஜியத்திலேயே அம்மன் எழுந்தருளியிருக்க நாம் அறியாது போனோமே என வருந்தி, மந்திரி பிரதானிகளை அம்மன் எழுந்தருளியுள்ள இடத்தைக் கண்டு பிடிக்க நாலா பக்கங்களிலும் அனுப்பி வைத்தார்.



எங்கு தேடியும் மாரியம்மன் கோவில் கிடைக்கவில்லை. ஓரிடத்தில் ஒரு புற்றுக்கு வேப்பிலை வைத்துசின்னக்குழந்தைகள் விளையாடிக் கொண்டிருந்தார்கள், மாரியம்மன் பேர் சொல்லி. இதை மகாராஜாவிடம் வந்து கூறினர். மகாராஜாவும் பிரதானிகளுடனே புன்னைவனக் காடுகளைச் சுற்றி வந்தார். இக்காடுகளில் ஏதோ ஓர் அதிசயம் உண்டென" அவரது உள்ளுணர்வு சொல்லிற்று. அப்போது ஒரு புன்னைமரத்தடியிலே சதாசிவ பிரம்மம் வீற்றிருப்பதைக் கண்ட பிரதானிகள் மகாராஜாவை அவ்விடம் அழைத்துச் சென்றனர். கண்ணால் கண்டவுடனே பெரிய மகான் என அறிந்து கீழே விழுந்து வணங்கி எழுந்து அவரிடம், 'இங்கு மாரியம்மன் கோவில் உள்ளதாகச் சொப்பனம் கண்டேன். ஆனால் மாரியம்மன் கோவிலைக் காணேன் வேப்பிலை சொருகி புற்றருகே குழந்தைகள் விளையாடுவதைத் தான் கண்டேன். தாங்கள் திருவுளம் கொண்டு தெரிவிக்க வேண்டும்' என பிரார்த்தித்தனர். பிரம்மம் அந்தப் புற்றேதான் மாரியம்மன் என்றார். மகாராஜா அதற்கு, 'இப்படியிருந்தால் வழிபாடு எப்படிச் செய்ய முடியும்? உருவம் வகுத்துக் கொடுக்க வேண்டும்' எனப் பிரார்த்தித்தார். பிரம்மம் அவருக்கு அஷ்ட கந்தங்களைப்பற்றிச் சொன்னார்கள். சாம்பிராணி, புனுகு, ஜவ்வாது, கஸ்தூரி, கோரோசனை, அகில், சந்தனம், குங்குமப்பூ, பச்சைக் கற்பூரம் ஆகிய சாமான்களைக் கொண்டு வரச் சொல்லி அந்த மண்ணிலேயே பிசைந்து சதாசிவ பிரம்மமே அந்த மாரியம்மனைச் செய்தார். ஜன ஆகர்ஷண சக்கரம் ஒன்று எழுதி அம்மன் முன்னால் வைத்து இதைப் பூஜை செய்ய குழந்தைக்குக் குணம் கிடைக்கும் என்றருளினார். அவ்வாறே குழந்தையும் நலம் பெற்றது.

தொடர்ந்து பூஜை நடந்துவர மகாராஜா ஏற்பாடு செய்து வைத்துள்ளார். முன்பு பாதாளக் குகை வழியே தினமும் அரசனும் அரச மகளிரும் அம்மன் ஆலயம் வந்து தரிசனம் பண்ணிச் செல்வார்களாம். அம்மன் பூஜை இன்றும் நடந்து கொண்டிருக்கிறது. 5 வருடங்களுக்கு ஒரு முறைதான் சாம்பிராணித் தைல அபிஷேகம் அம்மனுக்குச் செய்வார்கள். மண்ணினால் செய்யப்

பட்ட அம்மன் அல்லவா? இந்த 5 வருடங்களுக்குள் அம்மன் பலரது கனவில் தோன்றி புடவைகள் அணிவிக்குமாறு சொல்வார்கள். அபிஷேக பூஜையின்போது அம்மனுக்கு அணி செய்த பல பட்டுப்புடவைகளை உரித்தெடுக்கும் விழா காணக் கண்கோடி வேண்டும்.

சதாசிவ பிரம்மம் பஞ்சயோக சித்தி பெற்றபின் ஒருசமயம் சித்தம் பகிர்முகப்பட்ட ஒரு சந்தர்ப்பத்திலே இளமைப் பருவத்தில் தம்மோடு கற்ற போதேந்திராளையும், அய்யாவாளையும் சிந்தித்தனர். அது சத்திய சங்கல்பம். ஆகையால் அதிலிருந்து அகமுக திருஷ்டியோடு இருந்தாலும் கால்கள் மெல்ல நடந்து எப்படியோ போதேந்திராள் வதியும் கோவிந்தாபுரம் அருகே சென்றடைந்தனர். போதேந்திராள் தங்கியிருப்பதற்கு அருகாமையிலுள்ள காவேரிக்கரையில் உள்ள நாணற் புதர்க்கருகில் சென்றவுடனே பழைய சத்திய சங்கல்ப சிந்தனை ஓய்ந்தது. நாணற் புதரில் படுத்துக்கொண்டார். அதுசமயம் திருவிசைநல்லூர் அய்யாவாள் வாரம் ஒரு முறை போதேந்திராளைத் தரிசிக்கக் கோவிந்தபுரம் வருவார். அன்று வருகின்ற வழியில் நாணற்புதரில் இவர் படுத்திருப்பதைப் பார்த்து 'யாரோ ஒரு பெரிய மகானுபாவர். இவருடைய ஆசி கிடைத்தால் யோகவானாவோம்" என்று எண்ணி பிரதட்சண நமஸ்காரம் பண்ணினார். தோத்திரம் செய்தார். சதாசிவ பிரம்மம் அகமுக திருஷ்டியிலேயே இருந்து விட்டார். கண் திறந்து பார்க்கவில்லை. இது அபார நிலை.

அய்யாவாள் தமது குருநாதராகிய போதேந்திராளிடம் தெரிவித்து இவரை பகிர்முகப்படுத்தி அநுக்கிரகம் பெற முயற்சிக்க வேண்டும் என எண்ணி, போதேந்திராளை அணுகி வணக்கம் செலுத்தி, 'ஹே குருநாதரே! அருகிலுள்ள நாணற்புதரில் ஒரு மூகை கிடக்கிறது' என ஆர்வத்தோடு கண்ணீர் கசிந்துருகக் கூறினார். உடனே போதேந்திராள் எழுந்து அப்பேற்பட்ட மகானுபாவரை தரிசிப்போம் எனப் புறப்பட்டார். அங்கு கிடப்பது சதாசிவபிரம்மம் என்பது இவர்களுக்குத் தெரியாது. யாரோ ஒரு திகம்பரர். அவரது அநுக்கிரகம் பெறல் சிலாக்கியம் என எண்ணியவர்களாக பிரம்மேந்திராள் படுத்திருக்கும் சுற்றுவட்டத்திலுள்ள



புதர்களையும் செடிகளையும் அப்புறப்படுத்தி மெழுகி, தீபம் கொளுத்தி வைத்து, சாம்பிராணிப் புகையும் உண்டுபண்ணினார்கள்.

பின்னர் போதேந்திராள் ராமநாமத்தை யோக வலிமையால் பிரம்மேந்திராளுடைய உடலுக்குள் புகுத்தினார். போதேந்திராள் ராமநாம சித்தாந்தம் செய்தவராயிற்றே! சதாசிவ பிரம்மமும் ராமநாமத்துக்கு அதிக மகிமை கொடுத்து கீர்த்தனைகள் பாடியிருக்கிறார். ஆகவே ராமநாம மகிமையால் மகரிஷியை பகிர்முகப்படுத்தி ஆசி பெற்றுக்கொண்டு மன்னிப்புக் கோருவோம், அது ஒரு பெரிய குறைபாடு? ஆகாது என்று ராமநாமத்தைப் பாடினர். பிபரே ராமரஸம் என்ற கீர்த்தனையைப் பாடினர். ஆழ்ந்த அனுபவத்திலிருந்த பிரம்மத்தின் உள்ளம் வெளிப்பட்டு கண்விழித்துப் பார்த்தது. இரண்டாவது கீர்த்தனையாகிய கேலதி மம ஹிருதயே என்ற கீர்த்தனை பாடும்போது அதிலுள்ள சப்தபேதத்தை பிரம்மம் திருத்தியமைத்தார். வாக்கு வெளி வந்தவுடன் இது சதாசிவ பிரம்மமே எனத்தெரிந்துகொண்டு பேரானந்தத்தோடு புகழ்ந்துகொண்டே எண்ணற்ற வணக்கங்கள் செலுத்தினார்கள். சதாசிவ பிரம்மம் அதன்பின் ஏதும் பேசவில்லை. இருவரையும் பார்த்தவுடன் அகமுக திருஷ்டி வந்துவிட்டது. மிகுந்த பிரயத்தனப்பட்டும் ஆசிரமத்திற்கு அவரை அழைத்துச் செல்லமுடியவில்லை. பிரம்மமும் பகிர்முகப்படவில்லை. உடனே அங்கிருந்து ஆகாய மார்க்கமாகவோ, நடந்தோ வேறு இடம் சென்றுவிட்டார்கள். கர்ண பரம்பரையாக வந்த இந்தவிஷயத்தைக்கோவிந்தபுரத்தில் பூஜைசெய்து கொண்டிருந்த சாஸ்த்திரிகள் சொல்லக் கேட்டது ஆகும்.

சதாசிவ பிரம்மம் நிகழ்த்திய சித்திகளில் நாம் அறிந்து வைத்தவை ஒரு சில. நாம் அறியாமல் அவர் நிகழ்த்திய அற்புதங்கள் எத்தனையோ யாரறிவார்! பிரம்மத்திடம் அன்புகொண்ட குழந்தைகள் மகிழும் வண்ணம் கண்ணிமைக்கும் நேரத்தில் மதுரை மாநகருக்கு அழைத்துச் சென்று விழாக்காணச் செய்து திரும்பியதும், பிணியால் பெருந்துயருற்ற அன்பர் பலரை தம் அருட்பார்வையால் பிணி நீக்கி மகிழ்வித்ததும், தம்மைத் தாக்க

வந்த அறிவிலிகள் செயலற்று மரம் என நின்றுவிடச் செய்தது மான பல அற்புதங்களையும் சொல்லச் சொல்லப் பெருகும். இறுதியாக ஒரு சித்தி. இவ்வுடலொடு உலகம் சுற்றும் எண்ணம்விடுத்து ஜீவசமாதியடைந்துவிட வேண்டும் என்ற நினைவு அவருக்கு எழச் செய்த நிகழ்ச்சி அதுவாகும்.

ஒரு சமயம் வழக்கம்போல் உடல் நினைவேயின்றி பிரம்மமாக எங்கேயோ நடந்து போய்க் கொண்டிருக்கும்போது அரசன் கொலு வீற்றிருக்கும் அவையினுள் சதாசிவ பிரம்மம் நுழைந்து நடக்கிறார். திறந்திருந்த வாயில் வழியே உள்ளே புகுந்த பிரம்மம் அரசன் முன்பாக நடந்து போய்க் கொண்டிருக்கிறார். 'ஏதோ ஒரு பைத்தியக்காரன், துணிகூட இல்லாமல் வருகிறானே! கொலு மண்டபத்தினுள்ளே அவனைப் பிடித்துக் கட்டுங்கள்' என அந்த முஸ்லிம் அரசன் உத்தரவிட்டான். காவலர் யார் கண்ணுக்கும் தெரியவில்லை. அரசன் மட்டும்தான் காண்கிறான். பிரம்மம் நெருங்கி வந்ததும், 'எவனுக்கும் புத்தியில்லை, இவன் நேரே நம்மிடம் வருகிறான் பார்' எனச் சினந்து வாளை உருவி அவரது கைகளை வெட்டி விட்டான். ஒரு கை கீழே விழுந்து விட்டது. மற்ற கை பாதி ஒட்டிக் கொண்டிருக்கிறது. இரத்தம் கொட்டுகிறது. ஆனால் சதாசிவ பிரம்மத்திற்கு இது தெரியாது.

யோனுத்பன்ன விகாரோ பாஹௌ
மிலேச்சேன சின்ன பதிதேபி
அவிதித மமதாயாஸ்மை
ப்ரணதிம் குர்ம: ஸதாசிவேந்திராய

என சச்சிதானந்த சிவாபிநவ நரசிம்ம பாரதி மகா சுவாமிகள் பிரம்மேந்திராள் அனுக்கிரகம் கிடைத்த பின்னர் பாடிய பாடல் இதுவாகும்.

பாஹௌ—பிரம்மேந்திராளின் கைகளை, மிலேச்சேன சின்ன பதிதேபி — ஒரு மிலேச்சன் வெட்டி வீழ்த்திவிட்ட பிறகும், உத்பன்ன விகாரோ — விகாரம் உண்டாகாததினால் அவிதித மமதா— என்னுடையது என்ற எண்ணமே இல்லை. யாஸ்மை—



அப்பேற்பட்ட ஸகுர்ம ஸதாசிவேந்திராய—சற்குரு ஸதாசிவேந்திரரை பிரணதிம்—நமஸ்கரிக்கின்றேன்.

உடல், தான் என்ற எண்ணம் இருந்தால் அல்லவா அவருக்கு அது தெரியும்! அந்த எண்ணமே இல்லாத பரம்பொருளான அவருக்கு எப்படித் தெரியும்?

கைகீழே விழுந்த பிற்பாடு வழியேதும் இங்கு இல்லை போலும் என்ற எண்ணத்தில் பிரம்மம் திரும்பிப் போகிறார், கையோ கீழே கிடக்கிறது. அரசன் பார்த்து பயந்து நடுங்கி, 'பெரிய அபராதம் செய்து விட்டேன், யாரோ ஒரு பெரிய மகான். இந்து மகான். எவ்வளவு பெரிய மகான்! நமக்குத் தெரியவில்லை, நாம்தான் மிலேச்சன். நாம்தான் பாவி' என எண்ணினான். பிரஜைகளை ரட்சிக்க வேண்டிய அரசன் அந்தப் பிரஜைகளுக்கு பாதுகாப்பாக இருக்கும் மகரிஷியின் கைகளைச் சேதித்து விட்டோமே! நாம் உயிரோடு இருக்கலாமா? இந்த வாளாயுதத்தாலேயே அவர் எதிரில் உயிரை மாய்த்துக் கொள்ளவேண்டுமென்று வாளாயுதம் ஏந்தி, ஒரு கையில் துண்டிக்கப்பட்ட கையையும் எடுத்துக் கொண்டு ஓடிச் சென்று சதாசிவபிரம்மத்தின் திருவடிகளைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு அழுதான். அரசனுக்கும் மனோபலம் இருக்குமல்லவா! அந்த பலத்தால் பிரம்மம் விழித்து உள்ளம் வெளிப்பட்டு, 'என்னப்பா?" என்றார். 'பெரிய அபராதம் பண்ணிவிட்டேன். மன்னிக்கவேணும்' என்றான். 'அபராதம் பண்ணியவனும் இல்லை. ஏற்றுக்கொண்டவனும் இல்லை. போ" என்றார் சதாசிவபிரம்மம். அரசனோ 'மன்னித்து விட்டேன் என்று சொன்னால் ஆயிற்று. இல்லையெனில் இந்த வாளாயுதத்திற்கு நான் இரையாகிவிடுவேன்" என்றான். எவ்வளவு பெரிய பாதகம் பண்ணிவிட்டேன் என அலறினான். பிரம்மம் 'என்ன?' என்றார். 'தங்கள் கைகளைத் துண்டித்து விட்டேனே" என்றான் அரசன். அப்போதுதான் அதை அறிந்தார் பிரம்மம். எடுத்துக் கொடுத்தான் அரசன். கையில் வைத்துத் தடவினார். ஒட்டிக்கொண்டன கைகள். தன் வழியே நடந்தார். பின்னர் அந்த முஸ்லீம் அரசன் இராஜ்ஜியத்தைத் துறந்து சென்று விட்டதாக அறிகிறோம்.



இந்த நிகழ்ச்சி நடந்தவுடனே இந்தச் சந்தர்ப்பத்திலே ஒரு பிரக்ஞை வந்துதான் உடல் எண்ணம் வந்ததான், அரசனுக்கு அவன் செய்தபாதகம் அவனைப் பிடிக்காமலிருக்க வேண்டுமென ஆசி வழங்கினார். மன்னித்து விட்டு மேலும் எண்ணிப் பார்க்கிறார். 'நாம் வேண்டாம் என்று சொன்னாலும் அவன் செய்த வினையின் பயனை அடுத்த பிறவியிலேனும் அநுபவிக்க வந்து விடுமே. அப்பேற்பட்ட பாதகங்களை அநுபவிப்பதற்கு ஏதுவாக உடலை மறந்துநாம் ஏன் திரிய வேண்டும்? சுற்றியது போதும்" எனத் தீர்மானித்துக் கொண்டு அங்கிருந்து நேரே நெரூர் வந்து சேர்ந்தார்.

பொறுமையால் பிராரத்துவத்தை புசிக்கும் நாட்
செய்யும் கர்மம்
மறுமையில் தொடர்ந்திடாமல் மாண்டு போம்
வழி ஏதென்றால்
சிறியவர் இகழ்ந்து ஞானி செய்த பாவத்தைக் கொள்வார்
அறிவுளோர் அறிந்து பூசித்து அறமெல்லாம்
கைக்கொள்வாரே.

இந்தத் தத்துவ ஞானம் வருவதற்கு முன்பு அபிமானித்துச் செய்த புண்ணிய பாவங்களின் பலனை, இந்த உடல் முன் சரீரங்களிலே செய்தவற்றை அனுபவித்துக் கொண்டுதானிருக்கும். இப்பிறவியில் அபிமானம் இல்லாததாலே கையை வெட்டினாலும் வருத்தம் தெரிவதில்லை. யாராவது புஷ்பமாலை போட்டாலும் சந்தோஷம் தெரியாதல்லவா? ஆகவே அந்த புண்ணிய பாவங்கள் எங்கே போகும் எனக் குருவை சிஷ்யன் கேட்கிறான் கைவல்யத்திலே. குரு சொல்கிறார், பொறுமையோடு இருந்து மகிழ்ச்சியும் வாட்டமும் இல்லாமல் புண்ணியத்தின் பலனையும் பாவத்தின் பலனையும் அநுபவிக்கிறதாலே அந்த பாவத்தின் பலனை பாவிகள் எடுத்துக் கொள்வர். புண்ணியத்தின் பலனை நல்லோர் எடுத்துக் கொள்வர் என்று குரு சொல்கிறார். அது எவ்வாறு என சிஷ்யன் விளக்கம் கேட்க குரு பதிலிறுக்கிறார். 'எவ்வாறெனில் மக





ரிஷிகளை நிந்தித்து, மகரிஷிகள் முற்பிறப்பில் செய்த பாவத்தின் பலனை பாவிகள் எடுத்துக் கொள்வர். விவேகிகள் அவரைப் புகழ்ந்து துதித்து வேண்டிய சேவை செய்து அவர் செய்த புண்ணியத்தின் பலனைப் பெற்றுக்கொள்வார்கள். மகரிஷி களுக்குப் புண்ணியமும் இருக்காது. பாவமும் இருக்காது. உடல் விழுந்தால் விதேக கைவல்யம் பெற்றுவிடுவார்கள். ஆகவே சதா சிவ பிரம்மத்திற்கு இது தெரிந்திருந்ததனால் உடலை மறந்த இந் நிலையில் உடலோடு, உலகத்தில் சுற்றிக்கொண்டு இருப்பது மற்ற வர்களுக்கு (அவிவேகிகளுக்கு) பாதகத்தை ஏற்கச் செய்யும் சூழ் நிலை வந்துவிடும். இந்த நிலையெல்லாம் நமக்கு வேண்டாம் என சதாசிவ பிரம்மம் எண்ணிப் பார்த்து விட்டு உடலை மறைத்து விடு வோம் எனத் தீர்மானித்தார்கள்.

∴ ∴ ∴



# ஆறும் அத்தியாயம்

## ஜீவ சமாதி அடைதல்

நெரூர் வந்து சேர்ந்தவுடனே யோகவலிமையினாலே தமது சீடர்களான புதுக்கோட்டை மகாராஜா, மைசூர் மகாராஜா, தஞ்சாவூர் மகாராஜா மூவரையும் தீர்க்கமாக நினைத்தார். மூவரும் விரைவாக வந்து சேர்ந்தனர். 'குகையமையுங்கள். நான் உட்கார்ந்ததும் சாமக்கிரியைகளால் மறைத்து விடுங்கள்' என்றார். அவர்கள் அழுதனர். அதற்கு பிரம்மம் 'மனதால் தானே நினைக்க வேண்டும்? உடலைப் பார்த்துக் கொண்டிருந்து என்ன செய்யப் போகிறீர்கள்? காவேரியில் கூடப் புதைந்து கிடந்தேன். எப்படி வேண்டுமானாலும் நான் இருப்பேன். சொன்னபடி செய்யுங்கள்' என்று கூறினார்.

அவர் சொன்னபடி குகை அமைத்தார்கள். திருமூலர் தமது திருமந்திரத்தில் குகையமைக்கும் முறையினை விரிவாகக் கூறியுள்ளார். அநுபந்தமாக இப்புத்தகத்தில் இணைக்கப் பெற்றுள்ளது. முறையாகக் குகை அமைத்தார்கள். உட்காரும் போது போடக்கூடிய சாமான்களையெல்லாம் சதாசிவ பிரம்மம் அவர்களுக்கு அறிவித்தார். 'விபூதி, உப்பு, மஞ்சள் தூள், செங்கற்பொடி போட்டு மூடிவிடுங்கள் ஒன்பதாம் நாள் சிரசின் மேல் வில்வ விருட்சம் தோன்றும். பன்னிரண்டாம் நாள் காசியிலிருந்து சிவலிங்கம் வரும். அதை 12 அடிக்குக் கிழபுறம் வைத்துக்கோவில் கட்டுங்கள், இந்த வில்வ விருட்சத்திற்கு எந்த மறைப்பும் பண்ண வேண்டாம். மேடை போட்டு விடுங்கள்" என்று கூறியருளினார்கள்.

சதாசிவ பிரம்மம் தெரிவித்த நாளில் குகையில் வந்து அமர்ந்து விட்டார். அந்நாளுக்குள்ளாகவே மகாராஜாக்களும் வேண்டிய சாமான்களைச் சேகரித்துக் கொள்ள பக்த மகா ஜனங்கள் பெருந்திரளாகக் கூடினார்கள். உள்ளே உட்கார்ந்தவுடனே எல்லாச் சாமான்களும் போட்டு மூடினார் [illegible] தோத்திரம்பண்ணி

னார்கள். ஒன்பதாம் நாள் வில்வ மரம் தோன்றியது. பன்னிரண்டாம் நாள் அவர் சொன்னபடியே காசியிலிருந்து ஒரு பிரம்மச் சாரி சிவலிங்கம் கொண்டு வந்தார். 12 அடிக்குக் கீழ்புறம் வைத்து சிவன் கோவில் கட்டினர். மகரிஷிகளின் சமாதி மீதே கோவில் கட்டுவது வழக்கம் நெரூரில் மட்டுமே சமாதிக்கு 12 அடிக்கு கீழ்புறம் சிவலிங்கத்தை அமைத்து கோவில் கட்டப்பட்டுள்ளது. இங்கு துவாதசாந்தப் பெருவெளியில் சதாசிவ பிரம்மம் எழுந்தருளியிருக்கிறார். துவாதசம் எனில் 12 அங்குலம். அங்குலத்தை அடியாகக் கொண்டு சிவலிங்கத்தை அமைத்தனர்.

வில்வ விருட்சம் என்ன கருத்திலே வந்தது என்பது நமக்குத் தெளிவாகப் புலனாகிறது. வில்வவிருட்சம் தானாக உண்டாகி, பத்து அடி உயரம் நேரே வளர்ந்து மேலே போய் கொடையாக விரிந்திருக்கின்றது. அடிமரம் மூன்றாகப் பிரிந்திருக்கிறது. பிரம்மா விஷ்ணு, ருத்திரன் என்று பிரிந்திருக்கின்றது. ஒரே பரம் பொருளிலிருந்துதான் மும்மூர்த்திகளின் ஆவிர்ப்பாவம் உண்டாகியிருக்கிறது என்பது குறிப்பு. மேலே போய் விரிவது உலகாகாரமாக விரிந்தது என்பர்.

பாருருவி நீரெரிகால் விசும்புமாகிப்
பல்வேறு சமயமுமாய்ப் பரந்து நின்ற
ஏருருவில் மூவருமே யென்ன நின்ற
இமையவர் தம் திருவுருவே றெண்ணும்போது
ஓருருவம் பொன்னுருவம் ஒன்று செந்தீ
ஒன்று மாகடலுருவ மொத்து நின்ற
மூவுருவம் கண்டபோ தொன்றாஞ் சோதி
முகிலுருவ மெம்மடிகள் உருவந்தானே

—திரு நெடுந்தாண்டகம்

பார் என்றால் மலை. மலை மண் தானே. மணி, நெருப்பு, காற்று தண்ணீர், ஆகாயமாய் எல்லாப் பொருள்களாக விரிந்தது மீண்டும் பரம் பொருளாக மாறிவிட்டது. பிரம்மம் சமாதி அடைந்த இடத்திலே வில்வ [illegible]ம் இந்த இலக்கணத்தோடு அமைந்தி

ருக்கிறது. பூஜைகள் நடந்து கொண்டிருந்தன. புதுக்கோட்டை மகாராஜாவுக்கு ஓர் எண்ணம் உதித்தது. குருநாதர் கோவில் கட்டக்கூடாது என்று சொல்லிவிட்டார். ஆனால் வில்வ விருட்சத்தை ஆடுமாடுகள் பறித்துத் தின்றுவிடும். அதனால் பாதுகாப்பாகத் திருமதில் மட்டும் அமைத்துவிடுவோம் என்று திருமதில் எடுத்தார். நித்திய பூஜைகள் நடக்க ஏற்பாடு செய்தார்.

சதாசிவ பிரம்மம் நெரூரில் ஜீவசமாதியடைந்த அதே நேரத்தில் அதேபோல் மானா மதுரை, கராச்சி ஆகிய இரு இடங்களிலும் சமாதியடைந்ததாகக் கருதப்படுகிறது.

புதுக்கோட்டை, மைசூர், தஞ்சாவூர், மகாராஜாக்களைப் போலவே மானாமதுரையில் ஒரு சாஸ்த்திரிகளும், கராச்சியில் ஒரு முஸ்லிம் அன்பரும் பிரம்மம் உடலை உகுக்கின்ற காலத்தை தங்களுக்குத் தெரிவிக்க வேண்டுமென பலமாகப் பிரார்த்தனை செய்து கொண்டார்கள். பலர் இவ்விதம் வேண்டுதல் செய்திருக்கலாம் ஆனால் இந்த ஐவரும் தீர்க்கமாகப் பிரார்த்தனை செய்திருந்தனர். மானாமதுரை சாஸ்த்திரிகள் பிரம்மம் தெரிவிக்காமலிருந்தால் பிராணத்தியாகம் செய்வேன் என்றும் கூறியிருந்தார். ஆகவே நெரூரில் பிரம்மம் உடலை உகுத்த காலையில் மானாமதுரையிலும், கராச்சியிலுமாக கற்பிக்கப்பட்ட இரு உடல்களை உகுத்தார். நெரூர் போலவே குகை அமைக்கப்பட்டது. இரு உடல்களைச் சாமக்கிரியைகளால் மூடினர். வில்வ விருட்சமும் அவ்விடத்தே தோன்றியது. மானாமதுரையில் கராச்சி சென்று பார்த்ததில்லை.

ஆக சதாசிவ பிரம்மம் தம்மிடம் ஆழ்ந்த பக்தி செலுத்திய அன்பர்களுக்காக மூன்று உடல்களை மூன்று இடங்களில் உகுத்துள்ளார். ஸ்தூல உடல், சூட்சும உடல், காரண உடல் ஆகிய மூவுடல்களை மூன்று இடங்களிலே ஒரே சமயத்தில் உகுத்துள்ளார் இதனை சிருங்கேரி ஸ்ரீ சச்சிதானந்த சிவாபிநவ நரசிம்ம பாரதி மகாசுவாமிகள் தமது ஆரிய விருத்தம் என்ற பாடல்களில் கூறியுள்ளதிலிருந்து அறியலாம். பாடலும் விளக்கமும் அநுபந்தத்தில் காணவும்.



# ஏழாம் அத்தியாயம்

## முடிவுரை

சதாசிவ பிரம்மத்தின் சரீரம் மறைந்து 200 வருடங்கள் ஆகியிருக்கும். அதாவது இன்றைக்கு சுமார் 100 வருடங்களுக்கு முன் ஸ்ரீ சச்சிதானந்த சிவாபிநவ நரசிம்ம பாரதி மகா சுவாமிகள் அவர்கள் சிருங்கேரி பீடத்தில் வீற்றிருந்தார்கள். சிருங்கேரி சாரதாபீடத்தில் அமர்ந்தவுடனே பீடாதிபதிகளுக்கு 64 கலை களும் வந்துவிட வேண்டும் என்று ஆதிசங்கராச்சாரியார் அவர் கள் உபயபாரதியைக் கேட்டுக் கொண்டாராம். உபய பாரதி யாரும் ஒப்பியே வாணிதேவியை அங்கு ஸ்தாபித்தனர். அந்தப் பீடத்திற்கு வருவோர் முற்பிறவியிலும் கல்வி கற்றவர்களாக இருக்க வேண்டும். தத்துவ ஞான சாஸ்த்திரம் கற்று சித்திகளை அநுபவிக்கும் யோக்கிதை உடையவர்களாக இருக்கவேண்டும். அப்பேர்ப்பட்ட புத்திரன் இந்த இடத்திலே இருக்கிறுன் என்று வாணிதேவியே சொல்லித்தான் அங்கு அழைத்து வந்து பீடாதி பதியாக அமைப்பர். அத்தகைய சிருங்கேரி பரம்பரையில் மிக உயர்ந்தவர் ஸ்ரீ சச்சிதானந்த சிவாபிநவ நரசிம்ம பாரதி மகா சுவாமிகள் அவர்கள். ஆனுல் அவருக்கே இந்தப் பரிசயோக சித்தியில் தடை இருந்தது. இதனுல் அவர் ஏடுகளைப் புரட்டிப் பார்த்து நெரூரில் சதாசிவ பிரம்மம் என்ற பெரியவர்கள் சித்தி யடைந்திருக்கிறுர்கள் என அறிகிறுர். சதாசிவ பிரம்மம் உட லோடு வரமுடியும், நம்முடைய சந்தேகத்தையும் நிவர்த்தி பண்ணுவார்கள் என்ற நம்பிக்கை வைத்து, அவரிடம் போய் அடைக்கலம் புகுந்தால் போதும் என நெரூர் புறப்பட்டார்கள்!

சிருங்கேரி பீடத்தின் கிளை ஒன்று கரூரை அடுத்த மகா தானபுரத்தில் உண்டு. மகாதானபுரம் வந்து தெரிந்துகொண்டு பல்லக்கில் நெரூர் நோக்கிப் புறப்பட்டு வருகிறுர்கள். கரூருக் கருகில் அமராவதியின் தென்கரையிலுள்ள ரங்கநாதபுரத்தில் சற்று தங்கி, அமராவதியைக் கடந்து வடகரையில் உள்ள ரங்க



நாதம் பேட்டையை அடைந்தார். ஊரைத் தாண்டியவுடன் பல்லக்கு வேகமாகப் போகவில்லை. சீக்கிரம் போகவேண்டு மென்ற எண்ணத்தில் போகிகளைப் பார்த்து நடந்து போனால் என்ன என்று வினவ அவர்கள் முன்னால் யாரோ பிடித்துத்தள்ளு வது போல் உள்ளது. ஆகவே எப்படிப் போகமுடியும் என்றனர். பல்லக்கை கீழே வைக்கச் சொன்னார். வைத்தவுடனே நெருர் நோக்கி நமஸ்காரம் பண்ணுவது, கைநீட்டிய தூரம் நடந்து மறுபடியும் நமஸ்காரம் பண்ணுவதுமாக இப்படியே ஒன்றரை மைல் தொலைவு வந்தார். பிரம்மேந்திராள் சமாதி முன்புள்ள மேடைமீது உட்கார்ந்து கொண்டார்.

மகாசுவாமிகள் உடல் போய் என்று தெரிந்து கொண்டவர். குருநாதர் அருள் இல்லாவிட்டால் பல்லக்கைத் தடைப்படுத்த வேண்டியதில்லை. தடைப்படுத்தியதால் உறுதியாக குருநாதர் அனுக்கிரகம் கிடைக்கும் என்று சுவாமிகள் நம்பினார். சுவாமிகள் ஜகத்குரு ஆகையினாலே தன் சந்தேகம் தீராமல் மேடையை விட்டு எழுந்திருக்க மாட்டார்கள். காலையில் காவேரிக்குச் சென்று ஸ்நாநம் பண்ணி விட்டு வந்தால் பின்னர் மறுநாள் காலையில் காவேரி செல்ல மட்டுமே எழுந்து வருவார்கள். இப்படியே மூன்று நாட்கள் நடந்தது. இரண்டாம் நாளிலேயே செய்தி அறிந்து கனபாடிகளும், சாஸ்த்திரிகளுமாக 300 பேர் திருமதிலைச் சுற்றிக் கூடிவிட்டனர். ஆச்சார்யாள் அன்னமில்லாமல் இருக்கும் பொழுது நாம் மட்டும் உண்பதோ என அனைவரும் உட்கார்ந்து விட்டனர். மூன்றும் நாள் இரவு இரண்டு பேர் பேசும் சப்தம் கேட்டது. கோவிலுக்கு உள்ளே போக யாருக்கும் உத்தரவு இல்லை. திருமதிலுக்கு வெளியே இருந்து தான் பேசிய சப்தத்தைக் கேட்டனர். ஆகவே சதாசிவ பிரம்மமே தமது வடிவத் தோடேயோ, அசரீரியாகவோ பேசுகிறார்கள் என்று உணர்ந் தனர். பேசிவிட்டதால் சந்தேகம் நிவர்த்தியாகும். சந்தேகம் நிவர்த்தியானால் ஆச்சார்யாள் சதாசிவபிரம்மத்தைத் தோத்திரம் பண்ணியாக வேண்டும். குருவாக ஏற்றுக் கொண்டு பூஜை செய்ய வேண்டும். இதெல்லாம் நடந்து விட்டால் அவர் பேசியது உண்மை எனத் தீர்மானம் செய்யலாம் என அன்று விடியும் வரை ஆவலோடு திருமதிலுக்கு வெளியே அனைவரும் காத்திருந்

தார்கள். விடியற்காலம் மகாசுவாமிகள் சதாசிவ பிரம்மத்தை துதித்து 45 பாடல்கள் எழுதிக் கொண்டுதான் வெளியே வந்தார்கள். இப்பாடல்கள் இப்புத்தகத்தின் பிற்பகுதியில் சேர்க்கப்பட்டுள்ளன. பிரம்மேந்திரர் திருவுருவப் படத்தை பல்லக்கில் வைத்துக் கொண்டு சிருங்கேரி சென்றார்கள். சிருங்கேரி சென்றவுடன் இனி பொருள், புகழ், அதிகாரம் பற்றி சிந்தனை செலுத்தக் கூடாது என நினைத்து, துங்காநதிக்கு அக்கரையில் கட்டடம் அமைத்து அமர்ந்து விட்டார்கள். பட்டத்திற்கு ஸ்ரீ சந்திரசேகர பாரதி மகாசுவாமிகளை அமைத்தார்கள்.

ஆகவே 100 வருடங்களுக்கு முன் சதாசிவ பிரம்மம் எந்த வடிவத்திலேயோ வந்து பேசியிருக்கிறார், அதைக் கருத்தில் கொண்டு தொடர்ந்து சிருங்கேரி ஆச்சார்யாள் ஒவ்வொருவரும் பட்டத்திற்கு வந்தவுடன் நெரூர் வந்து அபிஷேக ஆராதனைகள் செய்வது வழக்கம். வேண்டிய சாமான்களை சிருங்கேரியிலிருந்தே கொண்டு வந்து விடுவார்கள். காவேரித் தீர்த்தமும் பாலும் மட்டுமே நெரூரில் எடுத்துக்கொள்வர். அபிஷேகம் முடிந்தவுடன் காணிக்கையாக எண்ணாமல் மூட்டை கட்டிக் கொண்டுவந்த ரூபாய் நாணயங்களை அப்படியே செலுத்தி செல்வார்கள். இதை குப்த தனம் என்று கூறுவார்கள்

ஆகவே சதாசிவ பிரம்மம் எல்லாச் சாஸ்த்திரங்களையும் கற்றுத் தெளிந்து, கற்றபடி நடந்து, சாஸ்த்திரங்களின் முடி பொருளை அப்யசித்து அநுபவித்து அநுபூதி பெற்று சரீரத்தை விடுகின்ற போதும் பிரக்ஞையோடு ஜீவசமாதியடைந்து மெய்ப்பொருளாக மறைந்த இடம் நெரூர். ஜீவசமாதியடைந்த பின் சிருங்கேரி மகா சுவாமிகளிடம் பேசியுள்ளார் என்றால் எங்கும் பரம்பொருளாய் நிறைந்துள்ளார் என்றுதானே பொருள் படுகிறது.

பிரம்மேந்திராள் இயற்றிய சாஸ்திரங்களும் கீர்த்தனங்களும் பல. அதில் சர்வம் பிரம்ம மயம் என்று பாடுகிறார் எல்லாப் பொருள்களும் பிரம்ம சொரூபம் என்று பாடுகிறார். அத்தகைய மகிமைபொருந்திய பிரம்மேந்திராளின் ஜீவசமாதியை பிரதட்சண



நமஸ்காரம் பண்ணுகிறவர்களுக்கு என்றும் நலன் கிடைக்கும். ஜனன மரணத்திற்கு ஏதுவான பந்தங்கள் விட்டு விலகும்.

பிரம்மேந்திராளுடைய சரித்திரத்தைக் காதிலே கேட்டாலும் அவருடைய கீர்த்தனங்களைக் காதிலே கேட்டாலும், அக்கீர்த்தனங்களின் அர்த்தங்களைப் புரிந்து அதன்படி நடக்கத் தொடங்கி விட்டாலும் கட்டாயம் மெய்ப்பொருளை அறிந்து விடலாம். இதற்கு ஆதரவாக இருக்கும் என்ற எண்ணத்தில் தான் அதிஷ்டானங்களை உண்டு பண்ணுகிறோம். மகரிஷிகளின் சமாதி வைக்கவேண்டும் எனத் திட்டம்போட்டு வைத்திருப்பதற்குக் காரணமே அவர்களுடைய அருட்சக்தி நாட்டிலுள்ள மக்களுக்கு நலன் தரும் என்பதே, சந்நியாசிகள் கூட்டங் கூட்டமாக இருக்கமாட்டார்கள். பத்து பட்டணங்களுக்கு ஒரு சந்நியாசி கிடைப்பதே அதிசயம். ஆகையால் மெய்யான சந்நியாசி கிடைத்து விட்டால், அவரது சரீரத்தை அடக்கம் பண்ணினால், அவரது பெருமைகள் வெளிப்பட விரித்துரைத்து விட்டால், அதைக் காதிலே கேட்டவர்கள் கொஞ்சம் கொஞ்சமாக இந்து தர்மத்தை பிடித்துக் கொண்டு முன்னேறுவார்கள். இங்ஙனம் முன்னேற ஏற்பாடு செய்வதற்குச் சிறந்த வழி இதுபோன்ற சமாதிகளை அமைத்து விடுதலேயாகும் என எண்ணித்தான் சதாசிவ பிரம்மம் சமாதி வைக்கும்படி ஏற்பாடு செய்தார்கள்.

சதாசிவப் பிரம்மத்தின் கீர்த்தனைகளைப் படிப்பது மக்கள் உய்ய வழியாகும். சாதாரண மக்கள் உயர்ந்து போவதற்காக ஒரு கீர்த்தனை பாடுகிறார். அதுவே மந்திரயோகம் எனச் 'சொல்லலாம். அந்தக் கீர்த்தனை வருமாறு.

பிபரே ராமரஸம் ரஸநே
பிபரே ராமரஸம்

தூரீ க்ருத பாதக ஸம்ஸர்க்கம்
பூரித நாநா விதபல வர்க்கம் (பிபரே)

ஜனன மரண பயஶோக விதூரம்
ஸகல சாஸ்த்ர நிக மாகம சாரம் (பிபரே)



பரிபாலித ஸுரஸிஜ கர்ப்பாண்டம்
பரம பவித்ரீ க்ருத பாஷண்டம் (பிபரே)

ஸுத்த பரமஹம் ஸாஸ்ரம கீதம்
ஸுக ஸௌநக கௌஸிக முகபீதம் (பிபரே)

பிபரே ராம ரஸம்—சத்ரஸங்களைப் பருகி உடலைப் பாதுகாத்துக் கொண்டு ராமரஸத்தைப் பருகி உள்ளத்தையும் உயிரையும் புதுப்பித்துக் கொள். ஜீவனை உயர்த்திக் கொள்.

பிபரே எனில் பருகுதல், ரஸநே எனில் நாக்கு. ராமரஸத்தை நாக்கினுல்தானே சொல்லியாக வேண்டும், ராம் ராம் என்று. ஆகையினுலே இந்த ராமநாமம் மனிதனை உயர்வற உயர்நலம் பெறுகின்ற வரைக்கும் உயர்த்திக் கொண்டு போய்விடும்.

நன்மையும் செல்வமும் நாளும் நல்குமே
தின்மையும் பாவமும் சிதைந்து தேயுமே
ஜென்மமும் மரணமும் இன்றித் தீருமே
இம்மையே ராமா வெறும் இரண்டெழுத்தினுல்

ராம் என்று சொல்லுகின்ற இந்த இரண்டு அட்சரங்களை நெடுங்காலம் நிரந்தரம் நேயத்தோடு ஒருவன் ஜபிக்கத் தொடங்கி விட்டால் நன்மையும் செல்வமும் நாளும் நல்கும். நலன்களெல்லாம் கைகூடும். ஐச்வர்யமும் கைகூடும். முன்முன் சரீரங்களிலே செய்த பாவங்களும் தொலைந்து போய் விடும். தீமைகள் தீரும். ஜனன மரண துக்கம் கெடும். அது வாய்க்கப் பெறுவது அடுத்த பிறவியிலல்ல, இந்தப் பிறவியிலேயே என்கிருர் கம்பர். இம்மையே, இந்தப் பிறவியிலேயே எல்லா நலன்களும் அநுபவிக்கலாம் எனக் கம்பர் பாடுகின்ருர்.

சதாசிவ பிரம்மமும் ரஸநே-நாக்கே நீ ராமநாமத்தை இடைவிடாது சொல்லிப் பழகு. அன்போடு சொல்லிப் பழகு ஆதரவோடு சொல்லிப்பழகு. அது என்ன செய்யும் எனில் துரீக்ருத பாதக ஸம்ஸர்க்கம்—நீ ஜென்ம ஜென்மங்களில் செய்த பாவக் கிருத்தியங்கள் உன்னைத் தொடர்ந்திருக்குமானுல், கெட்ட எண்ணங்கள் உன் உள்ளத்திலிருந்து வந்து கொண்டிருக்குமானுல் அவைகளை வெளியே விரட்டி விடும். இந்த ராம

நாமம். இது உள்ளே போய்ப் புகுந்தவுடனே கொடிய எண்ணங்கள் வெளியே போய்விடும். பாதக எண்ணங்கள் வெளியே போய்விடும். அப்படி பாதக எண்ணம் வெளியே போய்விடுமானால் பூரித நாநாவித பல வர்க்கம்—ராமநாமம் உள்ளே புகுந்தவுடனே விரும்பின நலன்களெல்லாம் கைகூடும்படி செய்து விடும். என்ன நலத்தை விரும்பிக்கொண்டு ராமநாமத்தை ஜெபிக்கிறோமோ அந்த நலன்களெல்லாம் கைகூடிவிடும்.

பின்னர் ஜனன மரண பயஸோக விதூரம்—ஜனன மரண துக்கத்தையும் அது போக்கிவிடும். இது ஸகல சாஸ்த்ர நிகம ஆகமசாரம்—சகல சாஸ்த்திரங்களுடைய கருத்து, சாரம்தான் ராமநாமம். வேதங்களின் சாரம்தான் ராமநாமம். உபநிஷத்துக்களின் சாரம்தான் ராமநாமம் ஆகையினால் பரிபாலித ஸரஸிஜ கர்ப்பாண்டம்—ராமநாமம் எல்லா இடையூறுகளையும் கட்டாயம் போக்கிவிடும். பரமபவுத்ரீ க்ருத பாஷண்டம்—பாஷண்டம் எனில் வஞ்சகம் — வஞ்சகமே செய்து கொண்டிருந்த வால்மீகியையும் பரமபவுத்திரனாகமாற்றியது ராமநாமம். ஸுத்த பரமஹம்ஸாஸ்ரம கீதம் ஸுக ஸௌநக,கௌஸிக முகபீதம்—சுத்த பரம ஹம்ச சந்நியாசம் பெற்றவர்களிலே தலைசிறந்தவர்கள் சுகப்பிரம்ம ரிஷியும், சௌநகரும், கௌசிகரும் என்று கூறுவர். அவர்கள் இந்த ராமநாமத்தை ஜெபித்துத்தான் உயர்ந்து போனார்கள். சுகப்பிரம்ம ரிஷி உடலை மறந்து செல்கின்ற காலத்திலே மரத்திலுள்ள பட்சிகளெல்லாம் சுகா சுகா எனச் சப்தமிடும். அப்பேர்ப்பட்ட அளவு கடந்த அநுபூதிமான்களாக அவர்கள் மாறினார்கள்.

ஆகவே இந்த ராமநாமத்தை தினமும் ஒருமணி நேரம் சொல்லிப் பழகி, பின்னர் ஒன்றரைமணி நேரத்திற்குக் கொண்டு வந்து விடுவோம். கிரகஸ்தாச்சிரமிகள் எல்லாம் முன்றேமுக்கால் நாழிகை அதாவது ஒன்றரை மணி நேரமேனும் ராமநாமத்தை ஜெபிப்பவர்களும் உண்டு. தினமும் ஒன்றரைமணிநேரம் ராமநாமத்தை ஜெபித்துவிட்டுத்தான் பிறகாரியங்களைச் செய்ய வேண்டும். அப்படிச்செய்தால் பாதகங்கள் தொலையும். புண்ணியவான்களாக மாறிவிடுவோம். நாளுக்கு நாள் மேன்மேலும் உயர்

வினை அடைவோம். இம்மந்திரத்தை ஜெபித்து, ஆதரவோடு ஜெபித்து, அநுபவம் பெற்று, அநுபூதிமான்களாக விளங்கும்படி அநுக்கிரகம் செய்யவேண்டுமாய் சதாசிவ பிரம்மத்தை பிரார்த்தித்துக் கொண்டு இந்த அளவிலே இந்தச் சரித்திரத்தைப் பூர்த்தி செய்து கொள்வோம்.

பரதத்வ லீன மனசே
ப்ரணமத் பவபந்த மோசநயாசு
ப்ரகடித பரதத் வாய
ப்ரணதிம் குர்ம: ஸதாசிவேந்திராய.

ஃ ஃ

# சமாதிக் கிரியை

திருமூலர் திருமந்திரம் 7 ம் தந்திரத்திலே 'சமாதிக் கிரியை' என்னும் விளக்கத்தை 1910 ம் பாடம் முதல் 1922 ம் பாடல் ஈருக 19 பாடல்களில் விளக்கியுள்ளார். பாடல்களும் பொழிப் புரையும் காண்க.

1910 அந்தமின் ஞானிதன் ஆகந்தீ யினில்
வெந்திடி னூடெலாம் வெப்புத் தீயினில்
நொந்தது நாய்நரி நுகரினுண் செரு
வந்துநாய் நரிக்குண வாகும் வையகமே

1911 எண்ணிலா ஞானியுடலெரி தாவிடில்
அண்ணல் தங் கோயில் அழலிட்டதாங்கொக்கும்
மண்ணின் மழைவிழா வையகம் பஞ்சமாம்
என்னரு மன்னர் இழப்பார் அரசே

1912 புண்ணியமாமவர் தம்மைப் புதைப்பது
நண்ணி யனல் நோக்கில் நாட்டில் அழிவாகும்
மண்ணி லழியில் அலங்கார பங்கமாம்
மண்ணுல கெல்லா மயங்கு மனல் மண்டியே

ஏகமாய் அகண்டமாய் பரிபூரணமாய் நிறைந்திருக்கின்ற தனது சொரூபத்தை அறிந்து அநுபவம் பெற்ற ஞானியின் தேகத்தை தீயினில் வெந்து போகும்படி கவனிக்காது இருந்து விட்டால் அப்பகுதியில் உள்ள மக்கள் பல தலைமுறைகள் வறுமையில் வருந்த நேரிடும்.

ஞானி உகுத்த உடலை கவனிக்காது விட நேர்ந்தாலும் அப் பகுதியில் வாழும் மக்கள் பல இன்னல்களுக்கு ஆளாவார்கள்.

ஞானியின் பெருமையை அளவிட்டு யாரும் கூறியதில்லை.

திருவள்ளுவர்

துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்து
இறந்தாரை எண்ணிக் கொண்டற்று

என்று கூறியபடி, பெருமை நிறைந்த ஞானியை அப்பகுதியில் உள்ள மக்கள் ஞானி உடலை உகுத்தபின் விஸ்வாசத்தோடு குகை செய்து, முறைப்படி அடக்கம் செய்யவேண்டும் என்பது இதன் உட்கருத்து.

1913 அந்தமில் ஞானி அருளை அடைந்தக்கால்
அந்த வுடல்தான் குகைசெய் திருத்திடில்
சுந்தர மன்னருந் தொல்புவி யுள்ளோரும்
அந்த மில் இன்பத்தருள்பெறு வாரே

ஒப்பற்ற ஞானியின் உடலை, குகை செய்து அடக்கம் செய்து, விஸ்வாசத்தோடு வழிபாடு செய்வார்களானால் அப்பகுதி மக்கள் லௌகிக வைதிக நலன்கள் யாவும் பெற்று இன்புறுவார்கள்.

1915 தன்மனை சாலை குளக்கரை யாற்றிடை
நன்மலர்ச் சோலை நகரினற் பூமி
உன்னருங் கானம் உயதந்த மலைச்சாரல்
இந்நிலத் தான் குகைக் கெய்தும் இடங்களே

குகைகள் அமைக்கும் இடங்கள் பற்றிக் கூறப்பட்டுள்ளது: தன்னுடைய மனையில்(கிருகஸ்தர்களுக்கு), பொது இடம் (சாலை), குளக்கரை, ஆற்றின் பக்கம், நல்ல மலர்கள் நிறைந்த சோலை, நகரின் நல்ல பூமி, சிறந்த காடு, உயர்வான மலைப்பகுதி இவை கள் ஞானிகட்கு சமாதிக் குகைகள் அமைக்க சிறந்த இடங் களாகும்.

1914 நவமிகு சாணுறல நல்லாழஞ் செய்து
குவைமிகு சூழவைஞ் சாணுகக் கோட்டித்
தவமிக குகைமுக் கோணமுச் சாணுக்கிப்
பவமறு நற்குகை பத்மா சனமே

1916 நற்குகை நால்வட்டம் பஞ்சாங்க பாதமாய்
நிற்கின்ற [illegible] வபாத தேர்விமுப்



பொற்பம ரோசமும் மூன்றுக்கு மூன்றணி
நிற்பவர் தாஞ்செய்யும் நேர்மையதாமே.

குகை அமைக்கும் முறை:

ஆறே முக்கால் அடி ஆழம் தோண்டி, மூன்றே முக்கால் அடியாக முக்கோணத்தை வகுத்து, முக்கோணத்தில் ஒன்னே கால் அடி உயரம் கட்டி, அதன்மூலம் இரண்டரை அடி உயரம் நால்வட்டமாக வகுத்து, அதன்மேல் ஐந்து பாதமாக, சதுரமாக இரண்டரை அடி உயரம் கட்டி, இந்தக் கட்டடத்தின் உட்புறம் சதுரமும் வட்டமும் எப்படி அளந்தாலும் மூன்றே முக்கால் அடியாக இருக்க வேண்டும் இந்தக் கட்டிடத்தின் சுவற்றின் கனம் நான்கு புறமும் இரண்டே கால் அடியாக இருக்க வேண்டும். குகையை மேற்கண்டவாறு அமைத்து அதன்மேல் பலகையால் மூடிபோட வேண்டும். குகையில் இறங்குவதற்கும் ஏறுவதற்கும் எளிதாக இருக்கும்படி படிகள் அமைத்துக் கொள்ள வேண்டும். நாள்தோறும் குகையில் இறங்கி ஞானிக்கு விருப்பமுள்ள ஆசனத்தில் உட்கார்ந்து தியானம், ஜபம் செய்ய வேண்டுமென்பதை தவமிகு குகை என்றும், அப்படிச் செய்தால் ஜனன மரணம் நீங்குமென்பதை பவமறு குகை பத்மாசனமே என்றும் திருமூலர் அருளிச் செய்தார்.

1917 பஞ்ச லோகங்கள் நவமணி லோரித்து
விஞ்சப் படுத்ததன் மேலாசன மிட்டு
முஞ்சி படுத்து வெண்ணீறிட்டதன் மேலே
பொன் செய்த நற்சுண்ணம் பொதியலுமாமே.

1918 நன்குகை நால்வட்டம் படுத்ததன் மேற்சாரக்
கள்ளவிழ் தாமங் களங்கத் தூரியுந்
தெள்ளிய சாந்து புழுகு பன்னீர் சேர்த்து
ஒள்ளிய தூபம் உவந்திய வீரே.

1919 ஓதிடும் வெண்ணீற்றுல் உத்தூளங் குப்பாய
மீதினி லிட்டா சனத்தினின் மேல் வைத்துப்
போதறு சுண்ணமும் நீறுழ பொலிவித்து
மீதி விறுத்தி விரித்திடு வீரே

1920 விரித்தபின் றுற்சாரு மேவுதல் செய்து
பொரித்தகறி போனக மிளநீருங்
குருத்தலம் வைத்தோர் குழைமுகம் பார்வை
தரித்தபின் வேல்வட்டஞ் சாத்திடுவீரே

1921 மீது சொரிந்திடும் வெண்ணீறுஞ் சுண்ணமும்
போது பலகொண்டு தருப்பைப்புல்வில்வமும்
பாத வுதகத்தான் மஞ்சனஞ் செய்துபார்
மீது மூன்றுக்கு மூன்றணி நிலஞ் செய்யுமே

**உடலை குகையில் அமைக்கும் முறை**

தவம் செய்த ஞானி உடலை உகுத்து பரிபூரணமாய் நிறைந்த பின்னர் அந்த உடலை குகையில் அமைக்கும் முறை கூறப்படுகின்றது.

ஒன்றேகால் அடி ஆழமுள்ள முக்கோணத்தில் 1 அங்குல கனம் விபூதியைப் பரப்பி, அதன்மேல் நவரத்தினங்களும் பஞ்சலோகங்களும் தூவி, அதன்மேல் 1 அங்குலம் மீண்டும் விபூதியைப் பரப்பி, விபூதியின் மேல் தர்ப்பாசம் அமைக்க வேண்டும் குகையின் முக்கோணம், வட்டம், சதுரமும் ஆகிய உட்புறத்தில் சந்தனம் குங்குமப்பூ, பச்சைக் கற்பூரம், புனுகு, ஜவ்வாது, அகில் சேர்த்து அரைத்த களபம் (குழம்பு) சுவற்றின் நாற்புறமும் பூசி, அதன் பின்னர் 6 அடி உயரம் மூன்றரை அடி சதுரமுள்ள கெட்டியான துணியில் பை தைத்து, பையின் அடி மட்டத்தில் மூன்றரை அங்குலகனம் விபூதி பரப்பி அதில் அபிஷேக அலங்காரம் செய்த உடலை உட்கார வைத்து, குகையின் முக்கோணத்தில் வடக்கு முகம் பார்க்கும்படி நான்கு பேர் பையைப் பிடித்து உட்காரவைக்க வேண்டும். பையை விரித்துப் பிடித்துக் கொண்டு உடலில் சுற்று வட்டத்தில் 6 படி விபூதி கொட்ட வேண்டும் அதன்மேல் 6 படி உப்பு இந்த முறைப்படி கொட்டி வயிற்றின் அளவு வந்தபிறகு 1 கிலோ கட்டிக் கற்பூரத்தைப் பொடி செய்து தூவவேண்டும். அதன்மேல் உப்பு, [illegible]தி, செங்கற்பொடி, தூள் செய்தது சம

அளவு கழுத்துவரை தூவ வேண்டும். அதன்மேல் 1 கிலோ கட்டிக்கற்பூரம் தூள் செய்து தூவ வேண்டும். அதன்மேல் விபூதி, உப்பு, மஞ்சள் தூள் சமமாகக் கலந்து வைத்திருந்து 1 கூடை தூவ வேண்டும். அதன்மேல் சிரசில் அரை கிலோ கட்டிக் கற்பூரம் தூள் செய்து துணியில் முடித்து தலைக்கட்டு கட்ட வேண்டும். அதன் மேல் 3 அங்குலம் விபூதி நிரப்பி, அதன் பிறகு பூஜை செய்தவுடன் கான்கிரீட் போட வேண்டும்.

பொற்சுண்ணம் பண்டைக் காலத்தில் போட முடிந்தது. பொற்சுண்ணத்திற்குப்பதில் சூடம் தற்காலத்தில் போடப்படுகிறது. குகைக்கு உட்புறத்தில் துணிப் பைக்கும் குகைக்கும் உள்ள இடைவெளியில் சலித்த நயமான மணல் அல்லது தூள் செய்த நயமான செங்கற்பொடி 10 மூட்டை தயார் செய்து வைத்திருந்து படிப்படியாக துணிப்பையை நிரப்பும்போதே இடைவெளியையும் நிரப்ப வேண்டும். துணிப்பையின் வாயை ஒரு கட்டு போடவேண்டும்,

1922 ஆதன மீதில் அரசு சிவலிங்கம்
போதும் இரண்டினில் ஒன்றைத் தாபித்து
மேதகு சந்நிதி மேவுத்தரம் பூர்வம்
காதலிற் சோடசங் காணுபசாரமே.

பக்த மகா ஜனங்கள் மனோபலத்திற்குத் தகுந்தவாறு ஞானியின் உபாசனு மூர்த்தியை ஸ்தாபனம் செய்து வழிபாடு செய்யலாம். அதைச் செய்ய முடியாதவர்கள் அரசு. வில்வம் முதலிய விருட்சங்களை அமைத்து விட வேண்டும்.

முடிவுரை:

1910 முதல் 1813 வரை 4 பாடல்களில் ஞானியின் உடலை குகை செய்தால் மக்கட்குக் கிடைக்கும் புண்ணியம் பற்றியும், குகை செய்யாவிடில் ஏற்படும் தீமைகள் பற்றியும் விளக்கப்பட்டுள்ளது.





1915 வது பாடலில் குகை அமைக்கும் இடம் பற்றியும் 1914, 1916 ஆகிய பாடல்களில் குகை அமைக்கும் முறை பற்றியும் கூறப்பட்டுள்ளது.

1917 முதல் 1921 முடிய உள்ள 5 பாடல்களில் ஞானியின் தேகத்தை குகையில் அமைக்கும் முறையும், அதில் போட வேண்டிய பொருட்கள்; (சாமக்கிரியைகள்) அதைப் போட வேண்டிய முறை ஆகியவை விளக்கப்பட்டுள்ளது.

1922 ம் பாடலில் குகையின்மேல் அமைக்கும் மூர்த்தி அல்லது விருட்சம் பற்றிக் கூறப்பட்டுள்ளது.





ஓம்

# ஸ்ரீ ஸதாசிவ பிரம்மேந்திர ஸ்தவம்

சிருங்கேரி
ஸ்ரீ சச்சிதானந்த சிவாபிநவ நரசிம்ம பாரதீ
மகா சுவாமிகளின் பாடல்கள்-உரையுடன்.

1. பரதத்வ லீன மனஸே
ப்ரணமத பவபந்த மோசனுயாக
ப்ரகடித பரதத்வாய
ப்ரணதிம குர்ம: ஸதாசிவேந்த்ராய

பரதத்வமான பிரம்மத்தில் லீனமான மனமுடையவரும், பரதத்துவத்தை பிரகாசப்படுத்தினவருமான ஸ்ரீ ஸதாசிவேவந்திரரை, விரைவாக சம்சாரமென்னும் பந்தத்தைப் போக்குவதற்காக நமஸ்கரிக்கிறோம்.

2. பரம சிவேந்த்ர கராம்புஜ
ஸம்பூதாய ப்ரணம்ர வரதாய
பததூத பங்கஜாய
ப்ரணதிம் குர்ம: ஸதாசிவேந்த்ராய.

பரமசிவேந்திரர் என்னும் மகானின் கரகமலத்தால் உண்டானவரும், நமஸ்கரித்தவர்களுக்கு பரத்தைக் கொடுக்கின்றவரும், காலால் தாமரையை ஜயித்தவருமான ஸதாசிவேந்திரரை நமஸ்காரம் செய்கிறோம்.

3. விஜன நதீகுஞ்ஜ க்ருஹே
மஞ்ஜுல புலினைக மஞ்ஜுதர தல்பே
சயனம் குர்வாணய
ப்ரணதிம் குர்ம: ஸதாசிவேந்த்ராய

ஜனங்கள் இல்லாத நதிக்கரையில் உள்ள புதராலான வீட்டில் அழகான மணல் திட்டென்னும் மிருதுவான படுக்கையில் படுத்திருப்பவருமான ஸ்ரீ ஸதாசிவேந்திரருக்கு நமஸ்காரம் செய்கிறோம்.



4. க்ரமாஹி த்விஜ பதயே
சமதம முக திவ்ய ரத்னவாரிதயே
சமனய மோஹ விததே
ப்ரணதிம் குர்ம: ஸதாசிவேந்த்ராய

காமமென்னும் (காமங்கள் என்னும்) பாம்புகளுக்குக் கருடனாக இருப்பவரும், சமம் தமம் முதலிய உத்தம ரத்தினங்களுக்குச் சமுத்திரமானவருமான ஸ்ரீ ஸதாசிவேந்திரனை, மோக சமூகம் அடங்குவதற்காக (அழிவதற்காக) நமஸ்காரம் செய்கிறோம்.

5. நமதாத்ம போத தாயா
ரமதே பரமாத்ம தத்வ ஸௌதாக்ரே
சம புத்தயே சம ஹேம்னோ:
ப்ரணதிம் குர்ம: ஸதாசிவேந்த்ராய

நமஸ்கரித்தவர்களுக்கு ஆத்ம போதத்தை அநுக்கிரகிக்கின்றவரும், பரமாத்ம தத்வம் என்னும் மாளிகையின் உச்சியில் ஆனந்தத்தை அனுபவித்துக் கொண்டிருப்பவரும், கல் பொன் இவைகளில் சமமான எண்ணம் உள்ளவருமான ஸ்ரீ சதாசிவேந்ரானை நமஸ்கரிக்கின்றோம்.

6. கிலதா வித்யா ஹாலா
ஹலஹத புர்யஷ்டகாய போதேன
மோஹாந்த கார ரவயே
ப்ரணதிம் குர்ம: ஸதாசிவேந்த்ராய

அறிவால் விழுங்கப்பட்ட அவித்யை என்னும் ஹாலாஹலத்தால் அழிக்கப்பட்ட புர்யஷ்டகத்தை உடையவரும், மோகமென்னும் மாபெரும் இருளுக்குச் சூர்யன் போன்றவருமான ஸ்ரீ ஸதாசிவேந்த்ரானை நமஸ்காரம் செய்கிறோம்.

7. சமமுக ஷட்கமு முக்ஷா
விவேக வைராக்ய தான நிரதாய
தரஸா நதஜன ததயே
ப்ரணதிம் குர்ம: ஸதாசிவேந்த்ராய



விரைவாகச் சமம் முதலிய ஆறையும் மோக்ஷமடைய வேண்டும் என்ற விருப்பத்தையும் விவேகத்தையும் வைராக்கியத்தையும் அநுக்கிரகிப்பதில் ஊக்கமுள்ளவரும் வணங்கப்படும் ஜனசமூகத்தை உடையவருமான ஸ்ரீஸதாசிவேந்திரரை நமஸ்காரம் செய்கிறோம்:

8. ஸித்தாந்த கல்ப வல்லீ
முக க்ருதி கர்த்ரே கபாலி பக்தி க்ருதே
கரதல முக்தி பலாய
ப்ரணதிம் குர்மஃ ஸதாசிவேந்த்ராய

ஸித்தாந்த கல்ப வல்லி :முதலிய கிரந்தங்களைச் செய்தவரும், கபாலம் கையில் ஏந்திய பரமசிவனிடத்தில் பக்தி உள்ளவரும், உள்ளங்கையில் மோக்ஷமென்னும் பலனை உடையவருமான ஸ்ரீ ஸதாசிவேந்திரரை நமஸ்காரம் செய்கிறோம்.

9. த்ருண பங்க லிப்த வபுஷே
த்ருண தோப்யதரம் ஜகத் விலோகயதே
வனமத்ய விஹரணாய
ப்ரணதிம் குர்மஃ ஸதாசிவேந்த்ராய

புல், சேறு இவைகளால் பூசப்பட்ட உடலை உடையவரும், துரும்பைக் காட்டிலுங்கூடத் தாழ்ந்ததாக உலகத்தைப் பார்க்கின்றவரும், காட்டின் நடுவில் விளையாடுகின்றவருமான (க்ரீடிக்கின்றவருமான) ஸ்ரீ ஸதாசிவேந்த்ரரை நமஸ்காரம் செய்கிறோம்.

10. நிகிருஹீத ஹ்ருதய ஹரயே
ப்ரக்ரு ஹீதாத்ம ஸ்வரூப ரத்னாய
ப்ரணதாப்த பூர்ண சசினே
ப்ரணதிம் குர்மஃ ஸதாசிவேந்த்ராய

அடக்கப்பட்ட இருதயம் என்னும் குரங்கை உடையவரும் (மனமென்னும் குரங்கை அடக்கியவரு... ...த்ம ஸ்வரூபம் என்

னும் ரத்தினத்தை ஸ்வீகரித்தவரும், வணங்கினவர்கள் என்னும் சமுத்திரத்துக்குப் பூர்ணிமா சந்திரன் போன்றவருமான ஸ்ரீ ஸதாசிவேந்திரரை நமஸ்காரம் செய்கிறோம்.

11. அக்ஞான திமிர ரவயே
ப்ரக்ஞாம்போதி பூர்ண சந்த்ராய
ப்ரணதாக விபின சுசயே
ப்ரணதிம் குர்ம: ஸதாசிவேந்த்ராய

அக்ஞானம் என்னும் இருளுக்கு ரவியானவரும், பரக்ஞானம் என்னும் சமுத்திரத்துக்குப் பூர்ண சந்திரனும் வணங்குபவர்களின் பாவமென்னும் காட்டிற்கு நெருப்புப் போன்றவருமான ஸ்ரீஸதாசிவேந்திரரை நமஸ்காரம் செய்கிறோம்.

12. மதி மல மோசன தக்ஷ
ப்ரத்யக் ப்ரம்மைக்ய தான நிரதாய
ஸ்ம்ருதி மாத்ர சந்துஷ்ட மனஸே
ப்ரணதிம் குர்ம: ஸதாசிவேந்த்ராய

மனோ மலத்தை விடுவிக்க சாமர்த்யம் வாய்ந்த பிரத்யக் பிரம்ம ஐக்யத்தைக் (ஜீவ ப்ரஹ்ம ஐக்யத்தைக்) கொடுப்பதில் ஊக்கமுள்ளவரும், நினைத்த மாத்திரத்திலேயே ஸந்துஷ்ட மனஸ்கருமான ஸதாசிவேந்திரரை நமஸ்காரம் செய்கிறோம்.

13. நிஜகுரு பரம சிவேந்த்ர
ச்லாகித விக்ஞான காஷ்டாய
நிஜதத்வ நிச்சல ஹ்ருதே
ப்ரணதிம் குர்ம: ஸதாசிவேந்த்ராய

தமது குருவாகிய பரமசிவேந்திரரால் புகழப்பட்ட விக்ஞானத்தின் கடைசி எல்லையை உடையவரும், ஆத்மதத்துவத்தில் சலிக்காத மனமுடையவருமான ஸ்ரீ ஸதாசிவேந்திரரை நமஸ்காரம் செய்கிறோம்.

14. ப்ரவிலாப்ய ஜகத் சேஷம்
பரிசிஷ்டா கண்ட வஸ்து நிரதாய



ஆஸ்ய ப்ராப்தான்ன புஜே
ப்ரணதிம் குர்ம: ஸதாசிவேந்த்ராய

உலகம் அனைத்தையும் லயிக்கச் செய்து மிகுந்த அகண்டமான வஸ்துவினிடத்தில் ஈடுபாடுடையவரும், வாயில் விழுந்த உணவை உண்டவருமான ஸ்ரீஸதாசிவேந்திரரை நமஸ்காரம் செய்கிறோம்.

15. உபதானீ க்ருத பாஹவே:
பரிரப்த விரக்தி ராமோய:
வஸனீ க்ருத காயாஸ்மை
ப்ரணதிம் குர்ம: ஸதாசிவேந்த்ராய

கையைத் தலையணையாய் வைத்துக் கொண்டவரும், விரக்தி என்னும் பெண்ணால் ஆலிங்கனம் செய்யப்பட்டவரும், ஆகாயத்தை வஸ்திரமாக உடையவருமான ஸ்ரீ சதாசிவேந்திரரை நமஸ்காரம் செய்கிறோம்.

16. ஸகலாகமாந்த ஸார
ப்ரகடன தக்ஷாய நம்ர பக்ஷாய
ஸச்சித் ஸுக ரூபாய
ப்ரணதிம் குர்ம: ஸதாசிவேந்த்ராய

ஸகல வேதாந்த சாரத்தையும் பிரகடனம் செய்வதில் திறமை வாய்ந்தவரும், நமஸ்கரிக்கின்றவர்களிடத்தில் பக்ஷமுள்ளவரும், ஸத்சித் ஆனந்தம் என்ற சொரூபமுடையவருமான ஸ்ரீ ஸதாசிவேந்திரரை நமஸ்காரம் செய்கிறோம்.

17. த்ராக்ஷா சிக்ஷண சதுர
வ்யாஹாராய ப்ரபூத கருணாய
வீக்ஷா பாவித ஜகதே
ப்ரணதிம் குர்ம: ஸதாசிவேந்த்ராய

திராக்ஷைக்குக் கற்பிப்பதில் சாமர்த்தியமுடைய வாக்கை உடையவரும், பெரும் கருணை உள்ளவரும், பார்வையாலேயே

உலகத்தைப்பரிசுத்தப்படுத்துகிறவருமான ஸ்ரீஸதாசிவேந்திரரை நமஸ்காரம் செய்கிறோம்.

18. யோனுத்பன்ன விகாரோ பாஹெள
ம்லேச்சேன சின்ன பதிதேபி
அவிதித மமதா யாஸ்மை
ப்ரணதிம் குர்ம: ஸதாசிவேந்த்ராய

முஸ்லிம் ஒருவனால் வெட்டப்பட்டு கீழே கை விழுந்திருந்த போதிலும் விகாரமடையாதவரும், அறியப்படாத என்னுடையது என்பதை உடையவருமான இந்த ஸதாசிவேந்திரரை நமஸ்காரம் செய்கிறோம்.

19. ந்யபதன் ஸுமானி மூர்தனி
யேனோச்சரி தேஷு நாம ஸுக்ரஸ்ய
தஸ்மை ஸித்தவராய
ப்ரணதிம் குர்ம: ஸதாசிவேந்த்ராய

எவரால் பரமசிவனின் நாமாக்கள் உச்சரிக்கப்பட்டபொழுது புஷ்பங்கள் சிரசில் விழுந்தனவோ அப்படிப்பட்ட ஸித்தசிரேஷ்டரான ஸ்ரீ ஸதாசிவேந்திரரை நமஸ்காரம் செய்கிறோம்.

20 ய: பாபிநோபி லோகான்
தரஸா ப்ரகரோதி புண்ய நிஷ்டா கர்யாண்
கருணம் புராக்ஷ யேஸ்மை
ப்ரணதிம் குர்ம : ஸதாசிவேந்த்ராய

எவர் பாபிகளையும் உடனேயே மிகப் புண்ணியம் செய்தவர்களில் சிரேஷ்டர்களாகச் செய்கிறாரோ அப்படிப்பட்ட கருணைக் கடலான இந்த ஸ்ரீ ஸதா சிவேந்திரரை நமஸ்காரம் செய்கிறோம்

21 ஸித்தேச்வராய புத்தே :
சுத்தி ப்ரத பாத பத்ப நமனாய
பத்திதாக மோசகாய
ப்ரணதிம் குர்ம: ஸதாசிவேந்த்ராய



புத்திக்குச் சுத்தியைக் கொடுக்கும் பாதபத்ம நமஸ்காரத்தை உடையவரும் பக்தர்களின் கூட்டத்தை விடுவிக்கின்றவரும் ஸித்தேச்வரருமான ஸ்ரீ ஸதாசிவேந்திரானை நமஸ்காரம் செய்கிறோம்.

22. ஹ்ருத்யாய லோக விததே
பத்யாவலிதாய ஜன்ம மூகேப்ய:
ப்ரணதேப்ய: பாதயுகலே
ப்ரணதிம் குர்ம: ஸதா சிவேந்த்ராய

லோக சமூகத்திற்கு மனோகரரும் சரணயுகளத்தில் பிறந்தது முதல் ஊமையர்களுக்கும் பத்ய சமூகத்தை அநுக்கிரகின்றவருமான ஸ்ரீ சதா சிவேந்திரானுக்கு நமஸ்காரம் செய்கிறோம்.

23 ஜிஹ்வோ பஸ்தரதான
ப்யாஹ் வோச்சாரென ஜாது தை ஜஸ்ய
குர்வாணுப விரக்தான்
ப்ரணதிம் குர்ம: ஸதாசிவேந்த்ராய.

எப்பொழுதாவது தனது பெயரை உச்சரித்தால் ஜிஹ்வை, உபஸ்தம் இவைகளிலே மிக ஈடுபட்டவர்களையும் வைராக்கியமுள்ளவர்களாகச் செய்கின்ற ஸ்ரீ ஸதாசிவேந்திரானை நமஸ்காரம் செய்கிறோம்.

24 கமனீய கவன கர்த்தரே
சமனீய பயாபஹார சதுராய
தபனீய ஸத்ருச வபுஷே
ப்ரணதிம் குர்ம: ஸதாசிவேந்த்ராய

அழகாக கவிகள் செய்கின்றவரும் போக்கத்தக்க பயத்தைப் போக்குவதில் ஸாமர்த்தியம் வாய்ந்தவரும் ஸ்வர்ணம் போன்ற சரீரத்தை உடையவருமான ஸ்ரீ சதாசிவப்ரம்மேந்திரானை நமஸ்காரம் செய்கிறோம்.

25 தாரக வித்யா தாத்ரே
தாராபதி கர்வ வாரகாஸ்ய

தார ஜப ப்ரவணாய
ப்ரணதிம் குர்ம: ஸதாசிவேந்த்ராய

தாரகம் என்னும் வித்தையை உபதேசிக்கின்றவரும், சந்திரனின் கர்வத்தைப் போக்கும் முகம் உடையவரும், தாரக ஜபத்தில் மிக ஈடுபாடுள்ளவருமான ஸ்ரீ ஸதாசிவேந்திரரை நமஸ்காரம் செய்கிறோம்.

26 மூகோபி யத் க்ருபாசேத்
லோகோத்தர கீர்த்திராசு ஜாயேத
அத்புத சரிதாயாஸ்மை
ப்ரணதிம் குர்ம: ஸதாசிவேந்த்ராய

எவர் கிருபையிருந்தால் ஊமையும் உலகத்தில் நிகரற்ற புகழ் வாய்ந்தவன் ஆவானோ அப்படிப்பட்ட, ஆச்சர்யசரித்திரமுடைய இந்த ஸ்ரீ ஸதாசிவேந்திரரை நமஸ்காரம் செய்கிறோம்.

27 துர்ஜன தூராய தராம்
ஸஜ்ஜன ஸுலபாய பாத்ர ஹஸ்தாய
தருதல நிகேதனாய
ப்ரணதிம் குர்ம: ஸதாசிவேந்த்ராய

துர்ஜனங்களுக்கு வெகு தூரத்தில் உள்ளவரும், ஸஜ்ஜனங்களுக்கு மிக சுலபரும் கையைப் பாத்திரமாகக் கொண்டவரும், மரத்தின் அடியையே இருப்பிடமாகக்கொண்டவருமான ஸ்ரீ ஸதாசிவேந்திரரை நமஸ்காரம் செய்கிறோம்:

28 பவஸிந்து தாரயித்ரே
பவபக்தாய ப்ரணம்ர வச்யாய
பவபந்த விரஹிதாய
ப்ரணதிம் குர்ம: ஸதாசிவேந்த்ராய

சம்சார சமுத்திரத்திலிருந்து கரையேற்றுகிறவரும், பரமசிவனது பக்தரும், வணங்கினவர்களுக்கு வசமானவரும், சம்சாரம் என்னும் பந்தம் நீங்கியவருமான ஸ்ரீஸதாசிவேந்திரரை நமஸ்காரம் செய்கிறோம்!



29 த்ரிவித ஸ்யாபி த்யாகம்
வபுஷ: க்ருத்வ ஸ்தலத்ரயே ய இவ
அகரோத் ஸமாதி மஸ்மை
ப்ரணதிம் குர்ம: ஸதாசிவேந்த்ராய

மூன்று ஸ்தலங்களில் போய் மூன்றுவிதமான சரீரத்தின் தியாகத்தைச் செய்து சமாதியை எவர் அடைந்தாரோ அப்படிப்பட்ட இந்த ஸதாசிவேந்திரரை நமஸ்காரம் செய்கிறோம். (ஸ்தூல, சூட்சும, காரணம் என்னும் சரீரம்)

30 காமிமபி ஜித ஹ்ருதயம்
க்ரூரம் சாந்தம் ஜடம் ஸுதியம்
குருதே யத் கருணாஸ்மை
ப்ரணதிம் குர்ம: ஸதாசிவேந்த்ராய

எவருடைய கருணை, காமியையும் மனதை ஜயமுள்ளவனாக வும், கொடியவனையும் சாந்த நிரம்பியவனாகவும், ஜடனையும் சூட்சும புத்தியுடையவனாகவும் செய்கின்றதோ அப்படிப்பட்ட இந்த ஸ்ரீ ஸதாசிவேந்திரரை நமஸ்காரம் செய்கிறோம்.

31. வேத ஸ்ம்ருதிஸ்த வித்வல்
லக்ஷண லக்ஷ்யேஷு ஸந்தி ஹாநாம்
நிச்சய க்ருதே விஹர்த்ரே
ப்ரணதிம் குர்ம: ஸதாசிவேந்த்ராய

வேதங்களிலும் ஸ்மிருதிகளிலும் உள்ள வித்வானுடைய லக்ஷணம், லக்ஷ்யம், இவைகளில் சந்தேகப்படுகின்றவர்களுக்கு நிச்சயத்தை உபதேசிக்கின்றவரும் க்ரீடிக்கின்றவருமான ஸ்ரீ ஸதாசிவேந்திரரை நமஸ்காரம் செய்கிறோம்.

32. பாலாருண நிப வபுஷே
லீலா நிர்தூத காம கர்வாய
லோலாய சிதி பரஸ்யாம்
ப்ரணதிம் குர்ம: ஸதாசிவேந்த்ராய

இளம் சூரியன் போன்ற சரீரம் உடையவரும், லீலையாகவே காமனின் கர்வத்தை உதறித் தள்ளியவரும், பரத்தில் ஆசை உள்ளவருமான ஸ்ரீ ஸதாசிவேந்திரரை நமஸ்காரம் செய்கிறோம்.

33. சரணீக்ருதாய ஸுகுணை:
சரணீ க்ருத ரக்த பங்கஜாதாய
தரணீ ஸத்ருக் க்ஷமாய
ப்ரணதிம் குர்ம: ஸதாசிவேந்த்ராய

உத்தம குணங்களாலே சரணம் என்று அடையப்பட்டவரும் (எல்லாக் குணங்களும் நீ தான் கதி என அடைக்கலம் புகப் பட்டவரும்), பாதமாக செய்யப்பட்ட செந்தாமரையை உடைய வரும் பூமிக்குச் சமமான பொறுமையை உடையவருமான ஸ்ரீ ஸதாசிவேந்திரரை நமஸ்காரம் செய்கிறோம்.

34. ப்ரணதாய யதி வரேண்யை:
கண நாதேனப்ய ஹார்ய விக்ன ஹ்ருதே
குணதா ஸீக்ருத ஜகதே
ப்ரணதிம் குர்ம: ஸதாசிவேந்த்ராய

யதிச்ரேஷ்டர்களால் நமஸ்கரிக்கப்படுகின்றவரும், விக்னேஸ்வரராலும் போக்க முடியாத விக்னங்களைப் போக்குகின்ற வரும், குணங்களால் உலகத்தையே தாஸபாவமடையச் செய்த வருமான ஸ்ரீ ஸதாசிவேந்திரரை நமஸ்காரம் செய்கின்றோம்.

35. ஸஹமான்ய ஸஹஸ்ராண்ய
ப்யபராதன் ப்ரணம்ர ஜனரசிதான்
ஸஹஸைவ மோக்ஷ தாத்ரே
ப்ரணதிம் குர்ம: ஸதாசிவேந்த்ராய

நமஸ்கரித்த ஜனங்கள் செய்த ஆயிரக்கணக்கான குற்றங் களைப் பொறுக்கின்றவரும் உடனேயே மோக்ஷத்தைக் கொடுக் கின்றவருமான ஸ்ரீ ஸதாசிவேந்திரரை நமஸ்காரம் செய்கிறோம்.

36. த்ருத தேஹாய நதாவலி
[illegible] ப்ரஜ்ஞா ப்ரதான வாஞ்சாத:



ஸ்ரீ தக்ஷிண வக்த்ராய :
ப்ரணதிம் குர்ம: ஸதாசிவேந்த்ராய

வணங்கின ஜனங்களுக்குச் சீக்கிரமாகவே ப்ரக்ஞையைக் கொடுக்கவேண்டும் என்ற வாஞ்சையால் சரீரத்தை ஸ்வீகரித்து, ஸ்ரீ தக்ஷிணாமுகமாக முகமுடைய ஸ்ரீஸதாசிவேந்திரரை நமஸ்காரம் செய்கிறோம்.

87. தாபத்ர யார்த்த ஹ்ருதய:
தாபத்ரய ஹார தக்ஷ நமனமஹம்
குருவர போதித மஹிமா
சரணம் யாஸ்யே தவாங்கா கமலயுகம்

மூன்று விதத் தாபங்களால் வருந்தும் மனமுடையவனும் குரு சிரேஷ்டரால் போதிக்கப்பட்ட மகிமையை உடையவனும் தாபத்ரயத்தைப் போக்கும் நமஸ்காரத்தை உடையவனும் உம்முடைய பத்ம யுகளத்தைக் கதி என்று அடைகிறேன்.

88. ஸதாத்மனி விலீன ஹ்ருத்
ஸகல வேத ஸாஸ்த்ரார்த்த வித்
ஸரித்தட விஹார க்ருத்
ஸகல லோக ஹ்ருத்தாப ஹ்ருத்
ஸதாசிவ பதாம்புஜ
ப்ரணத லோக லப்ய ப்ரபோ
ஸதாசிவ யதீட் ஸதா
மயிக்ருபா மபாராம் குரு

எப்பொழுதும் ஆத்மாவினிடத்தில் லீனமான மனமுடையவரும், சகல சாஸ்த்திரார்த்தத்தையும் அறிந்தவரும், நதிக்கரையில் க்ரீடிப்பவரும், எல்லா ஜனங்களுடைய ஹ்ருதயத் தாபத்தையும் போக்குகின்றவரும் சதாசிவனின் பாதபத்மத்தில் வணங்கின ஜனங்களால் அடையத் தகுந்தவரும், பிரபுவுமான ஸ்ரீ ஸதாசிவ யதீந்திரரே! எப்பொழுதும் எல்லையற்ற கருணையை என்பேரில் செலுத்தவேண்டும்.

39. புராயவன கர்த்தன ஸ்வர
தமந்த ரக் தோபிய:
புன: பத ஸரோருஹ
ப்ரணத மேனமேஞே நிதிம்
க்ருபா ப ரவச: பதம்
பதன வர்ஜிதம் ப்ராபயத்
ஸதாசிவ யதீட்ஸ
மய்யன வதிம் க்ருபாம் ஸிஞ்சது

முன்பு முஸ்லீமால் வெட்டப்பட்டபடியால் அதிக ரத்தப் பெருக்குடையவரானாலும் மறுபடியும் தாமரைத் திருவடியில் வணங்கின அவனுக்கு எவர் கருணை காட்டினாரோ அப்படிப்பட்ட ஸ்ரீ ஸதாசிவ யதிச்ரேஷ்டர் என்னிடத்தில் எல்லையற்ற கருணையை வர்ஷிக்கட்டும்.

40 ஹ்ருஷீக ஹ்ருத சேதஸி
ப்ரஹ்ருத தேஹகே ரோககை:
ரதேக வ்ருஜி ஞலயே
சமதமாதி கந்தோ ஜ்ஜிதே
தவாங்க்ரி பதிதே யதை
யதிபதே மஹா யோகிராட்
ஸதாசிவ க்ருபாம் மயி
ப்ரகுரு ஹேது சூன்யாம் த்ருதம்

இந்திரியங்களால் அபகரிக்கப்பட்ட மனமுடையவனும் துக்ககரங்களான ரோகத்தால் அடிபட்ட தேகமுடையவனும் பல பாவங்களுக்கு இருப்பிடமாக இருப்பவனும் சமம் தமம் முதலானவற்றின் லேசமும் இல்லாதவனுமான உன் பாதத்தில் விழுந்திருக்கும் (நமஸ்கரித்திருக்கும்) யதியான என் பேரில், மகாயோகிகளுக்குச் சக்கரவர்த்தியும் யதிமதியுமான ஸ்ரீ ஸதாசிவரே! காரணமற்ற கருணையைச் சீக்கிரமாகச் செலுத்தும்.

41 த சாஹமதி சாதுரீ
ரசித சப்த ஸங்கை: ஸ்துதிம்

விதாது மபிச க்ஷமோ
நச ஜபாதி கேய்யஸ்திமே
பலம் பலவதாம் வர
ப்ரகுரு ஹேது சூன்யாம் விபோ
ஸதாசிவ க்ருபாம் மயி
ப்ரவர யோகிநும் ஸத்வரம்

மிகச் சாதுர்யம் நிரம்பிய சப்த சமூகங்களில் ஸ்துதியைச் செய்வதற்கும் நான் சமர்த்தன் இல்லை. ஜபம் முதலானதைச் செய்வதற்கும் எனக்கு பலம் இல்லை, பலம் உள்ளவர்களுக்குள் சிரேஷ்டரான ஸ்ரீ ஸதாசிவரே! சமர்த்தரே! காரணமற்ற (அவ்யாஜமான) கருணையைச் சீக்கிரத்தில் என்பால் செலுத்த வேண்டும்.

42 சப்தார்த்த விக்ஞான யுதாஹி லோகே
வஸந்திலோகா பாஹவ: ப்ரகாமம்
நிஷ்டாயுதா ந ச்ருசத்ருஷ்ட பூர்வா:
விநுபவந்தம் யதிராஜ நூனம்.

உலகத்தில் பெரும்பாலும் பலர் சப்தார்த்த ஞானமுள்ளவர்களாக வசிக்கிறார்கள். நிஷ்டையுடன் கூடினவர்கள் இதற்கு முன் கேட்கப்படவில்லை, பார்க்கப்படவும் இல்லை, யதிராஜரே! நிச்சயமாகத் தங்களைத் தவிர.

43 ஸ்தோகார்ச்சன ப்ரீத ஹ்ருதம்புஜாய
பாகாப்ஜ சூடா பரூப தர்த்ரே
சோகாபா ஹர்த்ரே தரஸா நதாநாம்
பாகாய புண்யஸ்ய நமோயதீசே

கொஞ்சம் பூஜித்ததாலேயே சந்தோஷமடையும் மனமுடையவரும், சந்திரனை சிரோபூஷணமாகக் கொண்டவருமான பரமசிவனின் மற்றொரு ரூபமானவரும் நமஸ்கரித்தவர்களுக்கு விரைவில் துக்கத்தைப் போக்கடிக்கின்றவரும், புண்யத்தின் பலகுவியாக இருப்பவருமான யதீச்வரருக்கு நமஸ்காரம்.

44 நாஹம் ஹ்ருஷீகாணி விஜேது மீசோ
நாஹம் ஸபர்யா பஜனாதி கர்த்தும்
நிஸர்கயாத்வம் தயைவ பாஹி
ஸதாசிவேமம் கருணாபயோதே

நான் இந்திரியங்களை ஜயிக்க ஸமர்த்தன் அல்ல. பூஜை பஜனை முதலியவைகளைச் செய்யவும் நான் ஸமர்த்தன் அல்ல. கருணைக் கடலே! ஸ்ரீ ஸதாசிவரே! இயற்கையாக உள்ள கருணையாலே நீர் என்னைக் காப்பாற்றும்.

45 க்ருதயானயா நதாவலி கோடி
கதேனுதி மந்த போதேன
முதமேஹி நித்ய த்ருப்த ப்ரவர
ஸ்துத்யா ஸதா ஸதாசிவாச் வாசு

நமஸ்கரித்தவர்களின் வரிசையை அடைந்த மிகக் குறைந்த ஞானமுள்ள என்னாலே செய்யப்பட்ட இந்த ஸ்தோத்திரத்தாலே நித்யம் திருப்தியடைந்தவர்களில் மிகச் சிரேஷ்டரான ஸ்ரீ ஸதாசிவரே! நீர் மிகவும் சீக்கிரமாகச் சந்தோஷத்தை அடைய வேண்டும்.

ஸ்ரீ ஸ்ரீ ஸச்சிதாநந்த சிவாபிநவ ந்ருஸிம்ஹ பாரதீ
மஹாஸ்வாமிபி: க்ருத: ஸ்ரீ ஸதாசிவேந்த்ர
ஸ்தவ: ஸம்பூர்ண:

! ஓம் !

# ஸ்ரீ ஸதாசிவ ப்ரஹ்மேந்த்ர கீர்த்தனைகள்

## 1 நவரோஜ் — ஆதிதாளம்

பல்லவி

ஸர்வம் ப்ருஹ்மமயம் ரே ரே (ஸர்வம்)

சரணங்கள்

கிம் வச நீயம் கிம வச நீயம்
கிம் ரச நீயம் கிம ரச நீயம் (ஸர்வம்)

கிம் படனீயம் கிம படனீயம்
கிம் பஜனீயம் கிம பஜனீயம் (ஸர்வம்)

கிம் போக்தவ்யம் கிம போத்தவ்யம்
கிம் போத்தவ்யம் கிம போக்தவ்யம் (ஸர்)

ஸர்வத்ர ஸதா ஹம்ஸ்த்யானம்
கர்த்தவ்யம் போ முக்திவிதானம் (ஸர்)

## 2 நவரோஜ் — ஆதிதாளம்

பல்லவி

மானஸ ஸஞ்சர ரே ப்ரஹ்மணி (மான)

சரணம்

ஸ்ரீ ரமணீ குச துர்க்கவிஹாரே
ஸேவக ஜனமந் திரமந்தாரே (மான)

மதஸிகி பிஞ்சா லங்க்ருத சிகுரே
மஹனீ யகபோ லவிஜித முகுரே (மான)

பரமஹம்ஸமுக சந்த்ரசகோரே
பரிபூரித முர ளீரவதாரே (மான)

### 3 நவரோஜ் — ஆதிதாளம்

பல்லவி

தத்வஜ்ஜீவத்வம் ப்ருஹ்மணி (தத்)

சரணம்

யத்வத் தோயே சந்த்ர த்வித்வம்
யத்வன் முகுரே ப்ரதி பிம்பத்வம் (தத்)
ஸ்தாணௌ யத்வன் நரரூபத்வம்
பானுகரே யத்வத் தோயத்வம் (தத்)
சுக்தௌ யத்வத் ரஜதமயத்வம்
ரஜ்ஜௌ யத்வத் பணிதேஹத்வம் (தத்)
பரமஹம்ஸ குருணாத்வய வித்யா
பணிதா திக்ருத மாயா வித்யா (தத்)

### 4 கல்யாணி — ஆதிதாளம்

பல்லவி

பூர்ணபோதோஹம் ஸதானந்த (பூர்ண)

சரணம்

வர்ணாச்ரமாசார கர்மாதி தூரோஹம்
ஸ்வர்ணத் அகில விகார கதோஹம் (பூர்)
ப்ரத்ய காத்மாஹம் பரவித்த ஸத்ய தரோஹம்
ச்ருத்யந்த ஸதகோடி ப்ரகடித ப்ருஹ்மாஹம்
நித்யோஹம் அபயோஹம் அத்விதீ
யோஹம் (பூர்ண)
ஸாக்ஷி மாத்ரோஹம் ப்ரகலித பக்ஷபாதோஹம்
மோக்ஷ ஸ்வரூபோஹம் ஓம்கார கம்யோஹம்
ஸௌக்ஷ்மோஹம் அனேகோஹம்
அத்புதாத்மாஹம் (பூர்ண)

ஸ்வப்ரகாசோஹம் விபுரஹம் நிஷ்ப்ரபஞ்சோஹம்
அப்ரமேயோஹம் அசலோஹம் அகலோஹம்
நிஷ்ப்ரதர்க்ய கண்ட கரஸோஹம் (பூர்)

அஜநிர்மமோஹம் புதஜன பஜநீயோஹம்
அஜரோஹ மமரோஹம் அம்ருத ஸ்வரூபோஹம்
நிஜபூர்ண மஹிமனி நிஹித மஹி தோஹம் (பூர்ண)

நிரவயவோஹம் நிருபம நிஷ்களங்கோஹம்
பரமசிவேந்த்ர ஸ்ரீ குரு ஸோம ஸமுதித
நிரவதி நிர்வாண ஸுகஸாகரோஹம் (பூர்)

6 மத்யமாவதி—ஜம்பதாளம்

பல்லவி

ஆனந்த பூர்ண போதோஹம் ஸததம் (ஆ)

சரணம்

அஜரோஹம் ப்ரத்யகத்வைத ஸாரோஹம்
ஸகலச்ருத்யந்த தந்த்ர
விதிதோஹம் அம்ருதோஹ மத்யனந்த
பாவிதோஹம் (ஆ)

ஸாஹி சின்மாத்ர காத்ரோஹ பரம
மோக்ஷ சாம்ராஜ்ய
நியோகம் அம்ருதேர் ஹம் பக்ஷபாதாதி
தூரோஹம்
அதிகஸூக்ஷ்மோஹம் அனவதிக
ஸுகஸாகரோஹம் (ஆ)

ஸ்வப்ரகாசைகஸாரோஹம் ஸதஹப்ர
பஞ்சாத்ம
பாவோஹம் அபயோஹம் நிஷ்ப்ரதர்க்
யோஹம்
அமரோஹம் நிதஹமப்ரமே யாக்யமூர்த்தி
ரேவாஹம (ஆ)

6 சங்கராபரணம்—மிச்ரதாளம்

பல்லவி

ஆனந்தபூர்ண போதோ

(ஹம்சச்சிதானந்த)

சரணம்

சிவோஹம் ஸர்வாத்ம சரோஹம்
பரிநிர்வாண நிர்குண நிகிலாத்மகோஹம்
கீர்வாண வர்யானசோஹம்
காம கர்வநிர்வாபண தீரதரோஹம் (ஆன)

ஸத்ய ஸ்வரூபோஹம்
ஸரச்ருத்யந்த போதித ஸங்கஸாகரோஹம்
ப்ரத்யக பின்னப ரோஹம்
சுத்த மந்த்ரஹித் மயாதீ தோஹம் (ஆன)

அவபோத ரஸஸாக ரோஹம்
வ்யோமபவனுதிபஞ்ச பூதாதி தூரோஹம்
கவிவர ஸம்ஸேவ் யோஹம்
கோர பவ ஸிந்து தாரக பரம ஸௌக்ஷ்
மோஹம் (ஆன)

பாதிதகுண கலஞோஹம்
புத்த சோபித ஸமரஸ பரமாத்மாஹம்
ஸாதன ஜாதா தீதோஹம்
நிருபாதிக நிஸ்ஸீம பூமாநந்தோஹம் (ஆ)

நிரவயவோஹம் அஜோஹம்
நிருபம மஹிமனி நிஹிதமஹிதோஹம்
நிரவதிக ஸத்வ வஞோஹம்
நிர பரமசிவேந்த்ர ஸ்ரீ குருபோதி
தோஹம் (ஆன)

## 7 நாதநாமக்ரியா—ஆதிதாளம்

பல்லவி

ப்ருஹ்மைவாஹம் கில
ஸத்குருக்ருபையா (ப்ரு)

சரணம்

ப்ராஹ்மைவாஹம் கில குரு க்ருபையா
சின்மய போதானந்த தனம் தத் (ப்ரு)

ச்ருத்யந்தைக நிருபித மதுலம்
ஸத்ய ஸுகாம்புதி ஸமரஸ மதனம் (ப்ரு)

கர்மா கர்ம விகர்ம விதூரம்
நிர்மல ஸம்வித கண்டமபாரம் (ப்ரு)

நிரவதி ஸத்சாஸபத பதமஜரம்
நிருபம மஹிமனி நிஹித மனீஷம் (ப்ரு)

ஆசாபாச விஞசன சதுரம்
கோசா பஞ்சகாதீத மனந்தம் (ப்ரு)

காரண காரண மேக மனேகம்
கால கால கலிதோஷ விஹீனம் (ப்ரு)

அப்ரமேய பத மகிலாதாரம்
நிஷ்ப்ரபஞ்ச நிஜநிஷ்க்ரிய ரூபம் (ப்ரு)

ஸ்வப்ரகாச சிவ மத்வய மபயம்
நிஷ்ப்ரதர்க்ய மனபாய மகாயம் (ப்ரு)

## 8 தோடி—ஆதிதாளம்

பல்லவி

கேளதி பிண்டாண்டே பகவான் (கே)

சரணம்

ஹம்ஸஸ்ஸோஹம் ஹம்ஸஸ்ஸோஹம்
ஹம்ஸஸ்ஸோஹம் ஸோஹமிதி (கே)

பரமாத்மாஹம் பரிபூர்ணோஹம்
ப்ருஹ்மைவாஹம் அஹம்ப்ருஹ்மேதி (கே)
த்வக் சக்ஷுச்ருதி ஜிஹ்வா க்ராணே
பஞ்சவித ப்ராணோபஸ்தானே (கே)
சப்த ஸ்பர்ச ரஸாதிகமாத்ரே
ஸாத்விக ராஜஸ தாமஸமித்ரே (கே)
புத்திமத சித்தாஹம் காரே
பூஜல தேஜோ ககன ஸமீரே (கே)
பரம ஹம்ஸ ரூபேண விகர்த்தா
ப்ரும்ஹா விஷ்ணு ருத்ராதிக கர்த்தா (கே)

### 9. கல்யாணி—ஆதிதாளம்

பல்லவி

ஸ்மர வாரம் வாரம் சேத:
ஸ்மர நந்தகுமாரம் (ஸ்மர)

சரணம்

கோஷ குடீர பயோத்ருத சோரம்
கோகுல ப்ருந்தாவன ஸம்சாரம் (ஸ்மர)
வேணுரவா ம்ருதபான கடோரம்
விச்வஸ்திதி லய ஹேது விகாரம் (ஸ்மர)
கஸ்தூரி திலகாங்கிதபாலம்
கடிதட சோபித கனகதுகூலம் (ஸ்மர)
பரமஹம்ஸ ஹ்ருத் பஞ்சரகீரம்
படுதர தேனுக பக ஸம்ஹாரம் (ஸ்மர)

### 10 அடாணா—ஆதிதாளம்

பல்லவி

கேலதி மம ஹ்ருதயே ராம கே

சரணம்

மோஹ மஹார்ணவ தாரக காரீ
ராக த்வேஷ முகாஸுர மாரீ கே

சாந்தி விதேஹ ஸுதா ஸஹசாரீ
நகராயோத்யா நகர விஹாரீ ஸீ
பரமஹம்ஸ ஸாம்ராஜ்யோத்தாரீ
ஸத்ய ஞானாநந்த சரீரீ ஸீ

11. கல்யாணி—ஆதிதாளம்

பல்லவி

பஜரே கோபாலம் மானஸ பஜ

சரணம்

பஜகோபாலம் பஜித குசேலம்
த்ரிஜகன் மூலம் திதிஸுத காலம் பஜ
ஆகமஸாரம் யோக விசாரம்.
போக சரீரம் புவனாகாரம் பஜ
கதனகடோரம் கலுஷித தூரம்
மதனகுமாரம் மதுஸம்ஹாரம்
நத மந்தாரம் நந்தகிசோரம்
ஹதசாணூரம் ஹம்ஸவிகாரம் பஜ

12 செஞ்சுருட்டி—ஆதிதாளம்

பல்லவி

பிபரே ராமரஸம் ரஸனே

சரணம்

தூரீக்ருத பாதக ஸம்ஸர்க்கம்
பூரித நாநாவித பல வர்க்கம் பிப
ஜனன மரண பயசோக விதூரம்
ஸகல சாஸ்த்ர நிகமாகம ஸாரம் பிப
பரிபாலித ஸரஸிஜ கர்ப்பாண்டம்
பரம பவித்ரீக்ருத பாஷண்டம் பிப
சுத்த பரமஹம்ஸாச்ரம கீதம்
சுகசௌனக கௌசிக முகபீதம் பிப

## 13 காம்போதி—ஆதிதாளம்

பல்லவி

சிந்தாநாஸ்திகில தேஷாம் சிந்

சரணம்

சமதம கருணா சம்பூர்ணாணாம்
ஸாதுஸமாகம ஸங்கீர்ணாணாம் சிந்
காலத்ரய ஜித கந்தர்ப்பாணாம்
கண்டிற ஸர்வேந் த்ரியதர்ப்பாணாம் சிந்
பரமஹம்ஸகுரு பதசித்தாநாம்
ப்ரம்மானந்தா ம்ருதமத்தாநாம் சிந்

## 14 தனுஸி—ஆதிதாளம்

பல்லவி

ஸ்திரதா நஹி நஹி ரே மானஸ ஸ்திர

சரணம்

தாபத்ரய ஸாகர மக்னானாம்
தர்பாஹம் கார விலக்னானாம் ஸதிர
விஷய பாச வேஷ்டித சித்தானாம்
விபரீத ஞான விமத்தானாம் ஸ்திர
பரஹம்ஸ யோக விருத்தானாம்
பஞ்சலதர ஸாக ஸித்தானாம் ஸ்திர

## 15 ஆனந்தபைரவி—ஆதிதாளம்

பல்லவி

நஹிரே நஹி சங்கா காசின்

சரணம்

அஜ மக்ஷரம் அத்வைதமனந்தம்
த்யாயத்தி ப்ருஹ்மபரம் சாந்தம் நஹி)

யே த்யஜந்தி பகுதர பரிதாபம்
யே பஜந்தி ஸத்சித் ஸ்வரூபம் நஹி

பரமஹம்ஸ குரு பணிதம் கீதம்
யே படந்தி நிகமார்த்த ஸமேதம் நஹி

16 சுருட்டி — ஆதிதாளம்

பல்லவி

ப்ருஹி முகுந்தேதி ரஸனே (ப்ருஹி

சரணம்

கேசவ மாதவ கோவிந்தேதி
க்ருஷ்ணானந்த ஸதாநந்தேதி ப்ருஹி
ராதாரமண ஹரே ராமேதி
ராஜீ வாக்ஷ கனச்யாமேதி
கருட கமன நந்தகஹஸ்தேதி
கண்டித தசகந்தரமஸ்தேதி ப்ருஹி
அக்ரூரப்ரிய சக்ரதரேதி
ஹம்ஸ நிரஞ்சன கம்ஸஹரேதி ப்ருஹி

17 கீர்த்தனம்

பல்லவி

க்ருடதி வனமாலீ கோஷ்டே க்ரீடதி

சரணம்

அஜ மக்ஷர மத்வைத மனந்தம்
த்யாயந்தி ப்ருஹ்மபரம் சாந்தம் க்ரீடதி
ப்ரஹ்லாத பராசர பரிபாலீ
பவனாத்மஜ ஜாம்பவதனு கூலீ க்ரீடதி
பரமஹம்ஸ வல்குஸ்வம ஸ்வமாலீ
ப்ரணவ பயோதர கர்ம கபாலீ க்ரீடதி

## 18 கீர்த்தனம்

### பல்லவி

ஜய துங்க தரங்கே கங்கே — ஜய

### சரணம்

கமல பவாண்ட கரண்ட பவித்ரே
பஹுவித பந்த சேதல வித்ரே — ஜய

ஸரி க்ருத ஜன பாப ஸமூஹே
பூரித கச்சப குச்ச க்ருஹே — ஜய

பரம ஹம்ஸ குரு பணித சரித்ரே
ப்ருஹ்மா விஷ்ணு ஸங்கர நுதிபாத்ரே — ஜய

## 19 சங்கராபரணம்—ஆதிதாளம்

### பல்லவி

காயதி வனமாலீ மதுரம் — காயதி

### சரணம்

புஷ்பஸுகந்தஸு மலயஸமீரே
முனிஜனஸேவித யமுனாதீரே — காயதி

கூஜிதசுகபிக ககமுககுஞ்சே
குடிலாளகபஹு நீரதபுஞ்சே — காயதி

துளஸீ தாமவி பூஷண ஹாரீ
ஜலஜபவஸ்துத ஸக்குண சௌரீ — காயதி

பரமஹம்ஸ ஹ்ருத யோத்ஸவகாரீ
பரிபூரிதமுரளிரவதாரீ — காயதி

## 20 நவரோஜ்—ஆதிதாளம்

### பல்லவி

சேதः ஸ்ரீ ராமம் சிந்தய
ஜீமூதஸ்யாமம் — சேத

### சரணம்

அங்கீக்ருத தம்புரு ஸங்கீதம்
ஹனுமத் கவய கவாக்ஷ ஸமேதம் — சேத

நவரத்ன ஸ்தாபித கோடீரம்
நவதுளஸீதள கல்பித ஹாரம் — சேத

பரமஹம்ஸ ஹ்ருத் கோபுர தீபம்
சரண தலித முனிதருணீ சாபம் சேத

## 21 நவரோஜ்—ஆதிதாளம்

### பல்லவி

ப்ரதிவாரம்வாரம் மானஸபஜரே ரகுவீரம்

### சரணம்

காலாம்போ வர காந்திஸரீரம்
கௌஸிகஸௌனக பரிவாரம் ப்ரதி
கௌஸல்யா தஸரத ஸுகுமாரம்
கலிகல்மஷசய கஹனகுடாரம் ப்ரதி
பரமஹம்ஸஹ்ருத் பத்மவிஹாரம்
ப்ரதிஹத தஸமுக பலவிஸ்தாரம் ப்ரதி

ஃ ஃ ஃ

மகரிஷிகள் சமாதியடைந்த இடங்களிலேயே அமைக்கப் பெற்ற ஆலயங்கள் பிரசித்திபெற்று இருக்கின்றன என்பதற்கு ஒருபாடல் வருமாறு:

ஆதிகாலத்திலே தில்லையில் திருமூலர்
அழகர்மலை ராமதேவர் அனந்தசயனம் கும்ப முனி
திருப்பதி கொங்கணவர் கமலமுனி ஆரூர்
ஜோதிரங்கம் சட்டமுனி கருவையில் கருரார்
சுந்தரானந்தர் கூடல் சொல்லும் எட்டிக்குடியில் வான்மீகி
நல் தொல்காசி நந்திதேவர் பாதியா சங்கரன் கோயில்
பாம்பாட்டி
பழனிமலை போகநாதர்
திருப்பரங் குன்றமதில் மச்சமுனி பொய்யூரில் கோரக்கர்
பதஞ்சலி ராமேஸ்வரம் சேதிவைதீஸ்
வரன்கோவிலில் தன்வந்திரி
திகழ் மாயூரம் குதம்பர்
சித்தாருணையில் இடைக்காடர் சமாதியிற் சேர்ந்தனர்
சந்ததமும் இன்னவரை நினைந்து தொழும் அன்பர்கள்
எய்துவர் இன்ப நிலையே! ஃ

# ஆதித்ய ஹ்ருதய ஸ்தோத்திரம்

இராமருக்கு இராவணனோடு யுத்தம் செய்ய வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டபோது மகரிஷிகள் எல்லாம் இராவணனை இராமச்சந்திர பிரபுவால் வெற்றிபெற முடியுமா என்று ஏமாந்து திகில் அடைந்திருக்கிற சந்தர்ப்பத்தில் அகஸ்தியமுனிவர் பார்த்து, 'இந்த ஆதித்ய ஹ்ருதயத்தை மூன்றுமுறை பாராயணம் செய்வாய்; அதனால் ஏ இராமச்சந்திரபிரபு இந்த இராவணனை எளிதாக வெற்றி பெற்று விடுவாய் என்று அகஸ்திய முனிவர் சொன்னதின் பேரில் ஸ்ரீராமர் அதை கேட்டு ஆதரவோடு கற்று இராவணனை வெற்றி பெற்றார். ஆகவே இந்த ஆதித்ய ஹ்ருதயம் பாராயணம் பண்ணுவார்கள். எல்லா எதிர்ப்புகளிலிருந்து ஜெயம் பெறுவார்கள் என்பது நிச்சயம். மற்றும் கண் பிரகாசம் நன்றாக இருக்கும்.

ஓம்

ஸூர்ய நமஸ்காரம்

த்யானம்

ஸூர்யம் ஸுந்தரலோக நாத மம்ருதம்
வேதாந்த ஸாரம் ஶிவம்
ஞானம் ப்ரஹ்ம மயம் ஸுரேஶ மமலம்
லோகைக சித்தஸ்வயம்
இந்த்ராதித்ய நராதிபம் ஸுரகுரும்
த்ரைலோக்ய சூடாமணிம்
ப்ரம்ம விஷ்ணு ஶிவஸ்வரூப ஹ்ருதயம்
வந்தே ஸதா பாஸ்கரம்.

---

நமஸ்காரம்

ஓம் மித்ராய நம:
ஓம் ரவயே நம:

ஓம் ஸூர்யாய நம:
ஓம் பானவே நம:
ஓம் ககாய நம:
ஓம் பூஷ்ணே நம:
ஓம் ஹிரண்ய கர்ப்பாய நம:
ஓம் மரீசயே நம:
ஓம் ஆதித்யாய நம:
ஓம் ஸவித்ரே நம:
ஓம் அர்க்காய நம:
ஓம் பாஸ்கராய நம:
ஓம் ஆதித்யாதி நவக்ரஹ
தேவதாப்யோ நமோ நம:

---

## ஆதித்ய ஹ்ருதய ஸ்தோத்திரம்

அஸ்ய ஸ்ரீ ஆதித்ய ஹ்ருதய
ஸ்தோத்ர மஹா மந்த்ரஸ்ய
அகஸ்த்யோ பகவான் ரிஷி:
அனுஷ்டுப் சந்த:
ஸ்ரீ ஸூர்ய நாராயணோ தேவதா
நிரஸ்தா சேஷ விக்நதயா
ஸர்வத்ர ஜய ஸித்யர்த்தே
ஜபே விநியோக:

## த்யானம்

ஜயதி ஜயதி ஸூர்ய: ஸப்த லோகைக தீப:
கிரணம் குதித்தாப: ஸர்வ துக்கஸ்ய ஹர்தா
அருண கிரண கம்ய: சாதிராதித்ய மூர்த்தி:
பரம பரம திவ்ய பாஸ்கரஸ்தம் நமாமி.

1. ததோ யுத்த பரிஸ்ராந்தம் ஸமரே சிந்தயாஸ்திதம்
ராவணம் சாக்ரதோ திருஷ்ட்வா யுத்தாய ஸமுபஸ்திதம்

2. தைவதைஸ்ய ஸமாகம்ய த்ரஷ்டுமப்யாக தோரணம்
உபாகம்யா ப்ரவித்ராமம் அகஸ்த்யோபகவான் ரிஷி:

3. ராம ராம மஹா பாஹோ ஸ்ருணு குஹ்யம் ஸனாதனம்
யேந ஸர்வாநரீன் வத்ஸ ஸமரே விஜயிஷ்யஸி

4. ஆதித்ய ஹ்ருதயம் புண்யம் ஸர்வஸத்ரு விநாசனம்
ஜயா வஹம் ஜபேந்நித்யம் அக்ஷய்யம் பரமம்ஸிவம்

5. ஸர்வ மங்கள மாங்கல்யம் ஸர்வ பாபப்ரணாஸனம்
சிந்தா சோக ப்ரசமனம் ஆயுர்வர்த்தன முத்தமம்

6. ரஸ்மி மந்தம் ஸமுத்யந்தம் தேவா ஸுரநமஸ்க்ருதம்
பூஜயஸ்வ விவஸ்வந்தம் பாஸ்கரம் புவனேஸ்வரம்

7. ஸர்வ தேவாத்மகோ ஹ்யேஷ : தேஜஸ்வி ரஸ்மி
பாவன
ஏஷதேவா ஸுரகணான் லோகான் பாதி கபஸ்திபி:

8. ஏஷப்ரஹ்மாச விஷ்ணுஸ்ச ஸிவஸ்கந்த : ப்ரஜாபதி:
மஹேந்த்ரோ தனத: காலோ யம : ஸோமோஹ்ய
பாம்பதி:

9. பிதரோ வஸவ: ஸாத்யோ ஹ்யஸ்விநௌ மருதோமனு:
வாயுர் வஹ்னி பிரஜா பிராண : ருதுகர்தா ப்ரபாகர:

10. ஆதித்ய ஸவிதா ஸூர்ய: கக: பூஷா கபஸ்திமான்
ஸுவர்ண ஸத்ருஸோபானு ஹிரண்யரேதா திவாகர:

11. ஹரிதஸ்வ ஸஹஸ்ரார்சி: ஸப்த ஸப்திர் மரீசி மான்
திமிரோன் மதன: ஸம்பு: த்வஷ்டா மார்த்தாண்ட
அம்ஸுமான்

12. ஹிரண்ய கர்ப்ப ஸிஸிர: தபனோ பாஸ்கரோ ரவி:
அக்னி கர்ப்போ திதே புத்ர: ஸங்க ஸிஸிர நாசன

13. வ்யோம நாதஸ் தமோ பேதி ருக்யஜுஸ் ஸாம பாரக:
கனவ்ருஷ்டிரபாம் மித்ரோ விந்த்ய வீதி ப்லவங்கம:

14. ஆதபீமண்டலீ ம்ருத்யு: பிங்கள: ஸர்வ தாபன:
கவிர் விஸ்வோ மஹா தேஜ: ரக்த ஸர்வ பவோத் பவ:

15. நக்ஷத்ர க்ரஹ தாராணும் அதிபோ விஸ்வ பாவன:
தேஜஸா மபி தேஜஸ்வி த்வாதஸாத்மன் நமோஸ் துதே

16. நம: பூர்வாய கிரயே பஸ்சி மாயாத்ரயே நம:
ஜ்யோதிர கணுனும் பதயே தினாதி பதயே நம:

17. ஜயாய ஜய பத்ராய ஹர்யஸ்வாய நமோ நம:
நமோ நம: ஸஹஸ் ராம்ஸோ ஆதித்யாய நமோ நம:

18. நம: உக்ராய வீராய ஸாரங்காய நமோ நம:
நம: பத்ம ப்ரபோதாய மார்த்தாண்டாய நமோ நம:

19. ப்ரம்ஹேஸா நாச்யுதேஸாய ஸூர்யா யாதித்யவர்சஸே
பாஸ்வதே ஸர்வ பக்ஷாய ரௌத்ராய வபுஷே நம:

20. தமோக்னாய ஹிமக்னாய ஸத்ருக்னாய மிதாத்மனே
க்ருதக்னக்னாய தேவாய ஜ்யோதிஷாம் பதயே நம:

21. தப்த சாமீ கராபாய வஹ்னயே விஸ்வகர்மணே
நம: தமோபி நிக்னாய ருசயே லோக ஸாக்ஷிணே

22 நாஸயத்யேஷ வைபூதம் ததைவ ஸ்ருஜதி ப்ரபு:
பாயத்யேஷ தபத்யேஷ வர்ஷத் யேஷ கபஸ்திபி:

23 ஏஷ ஸுப்தேஷு ஸர்வேஷு பூதேஷு பரிநிஷ்டித:
ஏஷ ஏவாக்னி ஹோத்ரஞ்ச பலம் சைவாக்னி
ஹோத்ரிணும்

24. வேதாஸ்ச க்ரதவஸ்சைவ க்ரதூனும் பலமேவச
யானி க்ருத்யானி லோகேஷு ஸர்வ ஏஷ ரவி ப்ரபு:

25. ஏன மாபத்ஸு க்ருச்ரேஷு காந்தாரேஷு பயேஷுச
கீர்த்தயன் புருஷ: கஸ்சின் நாவ ஸீததி ராகவ:

26. பூஜயஸ்வைன மேகாக்ரோ தேவ தேவம் ஜகத்பதிம்
ஏதத் த்ரி குணிதம் ஜப்த்வா யுத்தேஷு விஜயிஷ்யஸி

27. அஸ்மின் க்ஷணே மஹாமாஹோ ராவணம் த்வம் வதிஷ்யஸி
ஏவ முக்த்வா ததா கஸ்த்யோ ஜகாம ச யதாகதம்

28. ஏதச் ச்ருத்வா மஹா தேஜா நஷ்டசோகோஸ்பவத்ததா
தாராய மாஸ ஸுப்ரீதோ ராகவ: ப்ரயதாத்மவான்

29. ஆதித்யம் ப்ரேக்ஷ்ய ஜப்த்வாது பரம் ஹர்ஷமவாப்தவான்
த்ரி ராசம்ய ஸுசிர் பூத்வா தனுராதாய வீர்யவான்

30. ராவணம்ப்ரேக்ஷ்ய ஹ்ருஷ்டாத்மா யுத்தாய ஸமுபாகமத்
ஸர்வ யத்னேன மஹதா வதே தஸ்ய த்ருதோ ஸ்பவத்.

31. அதரவிர வதந் நிரீக்ஷ்ய ராமம் முதிதமனா பரமம் ப்ரஹ்ருஷ்ய மாண:
நிஸிசரபதி ஸம்க்ஷயம் விதித்வா ஸுரகண மத்ய கதோ வசஸ்த்வரேதி

32. பாநோ பாஸ்கர மார்த்தாண்ட சண்டரச்மே திவாகர
ஆயுரா ரோக்ய மைஸ்வர்யம் ஸ்ரியம் புத்ராம்ஸ்ச தேஹிமே

ஆதித்ய ஹ்ருதயம் ஸம்பூர்ணம்.

ஜய பாஸ்கர ஜய பாஸ்கர
ஜய பாஸ்கர பாஹிமாம்
ஜய பாஸ்கர ஜய பாஸ்கர
ஜய பாஸ்கர ரக்ஷமாம்.






## இந்நூல் கிடைக்குமிடம்

1. கைலாச ஆசிரமம்
   நெரூர், [வழி] கரூர்
2. பாரி நிலையம்
   59, பிராட்வே,
   சென்னை- 1
3. வானதி பதிப்பகம்,
   13, தீனதயாளு தெரு,
   தி நகர், சென்னை--17
4. பிரேமா பிரசுரம்
   35, ஆற்காடு சாலை
   சென்னை -24.

